# விஷய ஸூசிகை

ஸ்ரீ

# ராமாநுஜ ஸித்தாந்த வைஜயந்தீ

*மாதந்தோறும் வெளிவரும் ஸத்ஸம்ப்ரதாயார்த்த ப்ரகாஶக பத்ரிகை*

| தொகுதி **2.** | பத்ராதிபர்<br>வடகரை. இராமாநுஜாசாரியார் | பகுதி **4.** |
| --- | --- | --- |

ஸ்ரீரஸ்து

ஶ்ரிய:காந்தாய நம:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

தஸ்மை ராமாநுஜார்யாய நம: பரமயோகிநே |
ய: ஶ்ருதிஸ்ம்ருதிஸூத்ராணாம் அந்தர்ஜ்வரமஶீஶமத் ||
வேதவேதாந்த வேதாங்க ஸூத்ரார்த்யப்ரவர்ஷிணீ |
ஸ்ரீராமாநுஜஸித்தாந்த வைஜயந்தீ விஜ்ரும்பதாம் ||

---

## மாசிமாதத்தின் மஹிமை

(பத்திராதிபர்)

*இம்மாசிமாதம், கேஶவாதிவ்யூஹாந்தரங்களில் மூன்றுவதான மாதவனுடைய அம்ஶமாயிருக்கும். ஆதலின் இம்மாத ஏகாதஶியன்று உபவசித்து, மாதவனை ஆராதித்து, த்வாதஶியன்று ப்ராத: காலத்தில் பாரணை செய்யுமவர்கள், ராஜஸூய யாகத்தைப் பண்ணியதால் பெறக்கூடிய பலனை யடைவார்கள்.*

த்வாதஶ்யாம் மாகமாஸேது மாமுபோஷ்யது மாதவம்
பூஜயேத்யஸ் ஸமாப்நோதி ராஜஸூயபலம் ந்ருப

*மற்றோரிடத்தில்*

அஹோராத்ரேண த்வாதஶ்யாம் மாகமாஸேது மாதவம்
ராஜஸூயமவாப்நோதி குலம் சைவ ஸமுத்தரேத்

*இன்னமும், இம்மாதத்தில் வரும் ஶுக்லபக்ஷத்வாதஶீ, வராஹத்வாதஶீ என்று சொல்லப்படுகிறது.*

ஸர்வரக்ஷகனுன ஸர்வேஶ்வரனுடைய அவதாரங்கள் பல வகைகளில் துஷ்ட நிக்ரஹ ஶிஷ்டபரிபாலநத்தின் பொருட்டுப் பண்ணிய மத்ஸ்யாதி அவதாரங்களை விபவாவதாரமென்பர்கள் பெரியோர்கள். அவ்விபவாவதாரத்தில் வராஹ அவதாரம் மூன்ருவது அவதாரமாகும். இவ்வவதாரம் லோககண்டகனுன ஹிரண்யாக்ஷன் என்கிற அஸுரனைக்கொன்று, ஸமுத்திரத்தில் ஆழ்ந்து போன பூமியை உத்தரித்து, உலகை வாழ்விக்கைக்காக ஸர்வேஶ்வரனங்கீகரித்த ஓர் அத்விதீயமான உருவமாகும்.

இவ்வவதாரத்தைப்பற்றி ஆழ்வார்கள்

தீதறு திங்கள்பொங்கு சுடரும்பரும்பர் உலகேழினேடு முடனே
மாதிரமண்சுமந்து வடகுன்றுநின்ற மலையாறு மேழுகடலும்
பாதமர்சூழ் குளம்பின கமண்டலத்தினெருபாலோடுங்க வளர்சேர்
ஆதிமுனேனமாகி யரணுயமூர்த்தி அதுநம்மை யாளுமரசே. என்றும்

கோலவராஹமொன்ருய் நிலம்கோட்டிடைக் கோண்ட வேந்தாய்
என்றும்

எறிதிரை வையம்முற்றும் ஏனத்துருவாயிடந்தபிரான் என்றும்

கொண்டாடி ஞானப்பிரானையல்லாலில்லை நான்கண்ட நல்லதுவே எனஈடுபடா நிற்பர்கள்.

பூமிப் பிராட்டியை உத்தேஶித்து உலகுக்கு ஞானத்தை உபதேஶித்து, அத்தாலே ஞானப்பிரான் என்று கொண்டாடும் பெருமையை வாய்ந்த இவ்வராஹாவதாரத்தைப்பற்றி பாரதாதி கிரந்தங்களில் ஆங்காங்கு விசேஷமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அது விஷயம் ராமாநுஜ ஸித்தாந்தம் என்கிற அடியேனுடைய வ்யாஸத்தில் யதோசிதம் தெரிவித்துக்கொள்ளப்படும்.

ஸர்வேஶ்வரன் இவ்வுருவை அங்கீகரித்த தினம், மாசிமாத ஶுக்லபக்ஷத்வாதஶி ஆகும். அதனுலேயே இந்தத்வாதஶீ வராஹத்வாதஶீ என்று சொல்லப்படுகிறது. ஆதலின், இந்தத் வாதஶிக்குமுன் தினமாகிய ஏகாதஶியன்று வராஹரூபியான பகவானை எழுந்தருளச் செய்து, அவன் முன்னே ஒரு கும்பத்தை தூப தீபாதிகளால் அர்ச்சித்து, ஸ்வர்ணத்தாலோ? வெள்ளியினுலோ? செம்பினுலோ? செய்யப்பட்ட வராஹ ப்ரதிமையை அக்கும்பத்தில் ப்ரதிஷ்டை செய்து, பூஜித்து, அன்றிரவு ஜாகரணத்தைச் செய்து (விழித்துக்கொண்டிருந்து) மறுநாள்

த்வாதசியன்று ப்ராதஃகாலத்தில் ஸ்நாநாதி நித்ய கர்மாநுஷ்டாநங்களைச் செய்து, வேத வேதாங்கங்களையப்யசித்து பரமஸாத்விகனை ஒரு ஸ்ரீ வைஷ்ணவனை ஆராதித்து, அக் கும்பத்தை வராஹப்ரதிமையுடன் அவனுக்கு ஸமர்ப்பித்துப் பிறகு, தாம், பாரணை செய்யுமவர்கள், இஹலோகத்தில் ஸகலவிதமான ஸௌபாக்யத்தையு மடைந்து தேஹவியோகாநந்தரம் அர்ச்சிராதிமார்க்கமாகப் பரமபதமடைந்து பரமாநந்தமடைவார்கள். இது விஷயம் வராஹ புராணத்தில் கூறப்பட்டிருக்கிறது.

இன்னமும் நமது விஶிஷ்டாத்வைத ஸித்தாந்த ப்ரவர்த்தகாசார்ய பங்க்தியாகிற ஹாரத்தில் நடுநாயகம்போல் விளங்காநின்ற யதிராஜனுக்கும், ஹிதமான ஆறு வார்த்தைகளைப் பேரருளாளனிடம் கேட்டருளிச்செய்த மஹாநுபாவரும், ஆளவந்தார் ஶிஷ்யருமாகிய திருக்கச்சி நம்பிகளவதரித்ததும் இம்மாதத்திலேயாகும்.

---

## மாசி மிருகசீர்ஷம்.

(ஸ்ரீகாஞ்சீ. ஸ்ரீ அண்ணங்கராசாரியார்.)

ஆழ்வார்களுள் குலசேகரப் பெருமாளும் ஆசாரியர்களுள் திருக்கச்சி நம்பிகளும் திருவவதரிக்கப் பெற்றதனால் மாசிமாதம் சிறப்புற்றதென்று ஸ்ரீவைஷ்ணவர்கள் கொள்ளப்ராப்தம். நமது வைஜயந்தியின் சென்ற வருடத்து மாசி மாத ஸஞ்சிகை புனர்பூசத்தினன்று வெளியாகி ஸ்ரீகுல சேகரப் பெருமாளுடைய குணாநுபவத்தைச் சிறிது செய்திருக்கின்றது. இவ்வாண்டு மாசி மாதத்தில் வெளிவருமிந்த ஸஞ்சிகை மாசி மிருக சீருடத்தினன்று அவதரித்த திருக்கச்சி நம்பிகளின் திவ்ய குணாநுபவத்தில் சிறிது அவகாசம் பெறுகின்றது.

நம்பிகளின் திருவவதாரஸ்தலம் பூவிருந்தவல்லி யென்னும் க்ஷேத்ரமென்பது ஸுப்ரஸித்தம். "கிலௌ ந்ருஹிஜாயநே யோகிநஸ்ஸர்வ யோகிநஷ்டா க்ஷிதாத்மநாநாம் நைஷாம் விஷ்டும் காஞ்சீகு—கிமப்யத்ரா பிஜாயந்தே யோகிநஸ் ஸர்வ யோகிஷு. ப்ரத்யக்ஷிதாத்மநாதாநாம் நைஷாம் சிந்த்யம் குலாதிகம்." என்று நம் ஆசிரியர்கள் உதாஹரித்தருளியுள்ள பிரமா

ணத்தின்படி, இவர் திருவவதரித்த வருணம் எது? என்கிற விசாரத்தில் நாம் வாய் வைப்பது அநபேக்ஷிதம். எக்குலத்தினும் சிறந்ததான தொண்டக்குலமே இவர்தாம் அவதரித்த திருக்குலமாகும்.

இவர், ஆளவந்தார் திருவடிகளில் ஆச்ரயித்து, ஸாமாந்ய விசேஷ சாஸ்த்ரங்களனைத்தையும் அதிகரித்துப் பரம விலக்ஷணராயினர். அர்ச்சாவதார எம்பெருமானுக்குத் திருவாலவட்டத் திருத்தொண்டு செய்வதில் இவர்க்கு இயற்கையான அபிநிவேசமுண்டாயது. திருவரங்கம் பெரியகோயிலில் அழகிய மணவாளனுக்கு அந்தத் திருத்தொண்டைச் செய்யப் புகுந்தார். அப்போது பெரிய பெருமாள் "* தெண்ணீர்ப் பொன்னி திரைக்கையாலடிவருடப் பள்ளி கொள்ளும் நமக்குத் தாபம் இல்லாமையால் இங்கு உமது திருத்தொண்டு அபேக்ஷிதமாக இல்லையே" என்றருளிச் செய்ய, அங்கு நின்றும் திருவேங்கடமலை யேறப் போந்து, அங்கே திருவேங்கட முடையானுக்கு அந்தத் திருத் தொண்டைச் செய்யப் புகுந்தார். அப்பெருமானும் "குளிரருவி வேங்கடத்தில் குளிரநிற்கும் நமக்கும் இந்தத் திருத்தொண்டு அபேக்ஷிதமாக இல்லையே; * அயமேத வேள்வியில் அவதரித்த அத்திகிரியருளாளப் பெருமாளுக்கு இது அபேக்ஷிதமாயிருக்கக்கூடும்; அங்கேறச் சென்று தொண்டு செய்து வாழ்வீராக" என்று நியமிக்க, அங்கு நின்றும் ஸ்ரீஹஸ்திசைல சிகரோஜ்ஜ்வல பாரிஜாதனான பேரருளாளனுடைய திருவடி வாரத்திலே விடை கொண்டு திருவாலவட்டமும் கையுமாய் ஒழிவில் காலமெலா முடனாய் மன்னி அத்தாணிச் சேவகம் செய்து கொண்டிருந்தனர்.

இவருடைய ஜ்ஞாநாநுஷ்டாந ஸம்பத்ஸம்ருத்தியையும் பக்தி விரக்திகளின் விலக்ஷண பரிபாகத்தையும் கண்டு வியந்த எம்பெருமானார், தாம் இவரது திருவடிகளில் ஆச்ரயித்து உய்வுபெற வேணுமென்று பாரித்து, இவரை எவ்வளவோ அநுவர்த்தித்தும் மநோரத ஸித்தி பெற்றிலர். ஒருநாள் "போனகஞ் செய்த சேடம் தருவரேல் புனிதமன்றே" என்ற தொண்டரடிப் பொடியாழ்வார் பாசுரத்தின்படி நம்பிகள் பக்கலில் திருப்போனக சேடம் பெற வேணுமென்று பாரித்தும், எம்பெருமானார்க்கு அதுதானும் ஸித்தித்ததில்லையாக, பேரருளாளப் பெருமாள் அர்ச்சாவதாரஸமாதியைக் கடந்து நம்பிகளோடே ஸல்லாபம் செய்தருளுகிறபடியையறிந்த

அவ்வெம் பெருமானுர், தமக்கு சாஸ்த்ரார்த்தங்களிலே சில ஸந்தேஹங்கள் இருப்பதாகவும், அவற்றின் பரிஹாரத்தைத் தேவப் பெருமாள் மூலமாகப்பெற நினைத்திருப்பதாகவும் நம்பிகள் பாடே விஜ்ஞாபிக்க, நம்பிகளும், அன்றிரவு தேவப்பெருமாளுடனே வார்த்தையாடுமளவில் எம்பெருமானுர்க்கு ஸந்தேஹ பரிஹாரமாகப் பெற்று வெளியிட்டவை ஆறுவார்த்தைகள் என்று ஸுப்ரஸித்தமாயிருக்கும்.

“𑌅𑌹𑌮𑍇𑌵 𑌪𑌰𑌂 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌦𑌰𑍍𑌶𑌨𑌂 𑌭𑍇𑌦𑌏𑌵𑌚 |
𑌉𑌪𑌾𑌯𑍇𑌷𑍁 𑌪𑍍𑌰𑌪𑌤𑍍𑌤𑌿𑌸𑍍𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 𑌅𑌨𑍍𑌤𑌿𑌮𑌸𑍍𑌮𑍃𑌤𑌿 𑌵𑌰𑍍𑌜𑌨𑌮𑍍 ||
𑌦𑍇𑌹𑌾𑌵𑌸𑌾𑌨𑍇 𑌮𑍁𑌕𑍍𑌤𑌿𑌸𑍍𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 𑌪𑍂𑌰𑍍𑌣𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌸𑌮𑌾𑌶𑍍𑌰𑌯𑌃”

என்று ச்லோக ரூபமாகவும்,

சேப்புகின்ற பரதத்வம் யானே யென்னச் சேப்புதிவே
றேப்பிலாதாய் ! தரிசனமும் பேதமேன்றேயுரைத்திடுக
தப்பிலாத வுபாயமதும் ப்ரபத்தியேன்றே சாற்றிடுக
அப்ப புகல்கவிவையன்றி நினைவும் வேண்டா அந்திமத்தில்.

இந்தச் சரீரவவதானந் தன்னிலிசையும் மோக்கமது
அந்தமில்லாக் குணத்தினனுக் காசாரியனும் பேரியநம்பி
சிந்தையுள்ளே இவையேல்லாந் தேளிந்து நோக்கி யிளையாழ்வான்
முந்த நினைந்தானிவையிவையே மோழிந்து வருக போ யேன்றுன்.”

என்று பாசுரங்களாகவும் பெரியோர் வழங்குவர்.

இந்த ஆறுவார்த்தைகளின் ஸாரப்பொருளை யீண்டு ஸம்க்ஷேபமாக வுணர்த்துவோம்;

## 1. அஹமேவ பரம் தத்வம்.

ஸ்ரீமந்நாராயணனே பரதத்வமென்பது முதல்வார்த்தை. எது ஜகத்காரண வஸ்துவோ அதுவே உபாஸ்யமென்றும் அதுவே முழுமுதற்கடவுள் என்றும் உபநிஷத்துக்களின் கொள்கையாகும். எது ஜகத்காரணவஸ்து வென்று ஆராயப் புகுமளவில், சாந்தோக்யோபநிஷத்தில் “ஸதேவ ஸோம்யேத³ம் அக்³ர ஆஸீத் ஏகமேவாத்³விதீயம்” என்று ஸத் என்ற சப்தத்தாலே மூலப்பொருள் ஓதப்பட்டது. அதனால் ஒரு நிஷ்கர்ஷம் பிறக்க வழியில்லை. மற்றும் உபநிஷத்துக்களை ஆராயுமிடத்தில்

வாஜஸநேயகத்தில் “ ப்ரஹ்ம வா இதமேகமேவாக்ர ஆஸீத் ” என்று ஓதப்பட்டது. முதற்காட்டிய உபநிஷத்தில் மூலப்பொருள் ஸத் சப்தத்தாலே கூறப்பட்டது; இதில் ப்ரஹ்ம சப்தத்தாலே கூறப்பட்டது. அந்த வஸ்து மிகவும் பெரிது என்று இதனால் ஏற்பட்டது. இன்னமும் உபநிஷத்துக்களை ஆராயுமளவில் ஐதரேயத்தில் “ ஆத்மா வா இதமேக ஏவாக்ர ஆஸீத் ” என்றுளது. இதனால், அந்த மூலப்பொருள் அறிவுடையது என்றுமாத்திரம் ஏற்பட்டது. இந்திரன் சந்திரன் ஸூர்யன் யமன் வாயு வருணன் குபேரன் சிவன் பிரமன் என்று சொல்லப்படுகின்ற ஆத்மவர்க்கங்களில் ஒவ்வொரு தெய்வத்திற்கும் ஸ்ருஷ்டிகூமே சாஸ்த்ரங்களிற் கூறப்பட்டிருத்தல் குறிக்கொள்ளத் தக்கது. ஒரு ஸர்வேச்வரனுடைய ஆஜ்ஞைக்கு அஞ்சி நடப்பாருமாய், அவனை ஆராதித்துப் பதவிகள் பெற்றாருமாய், சாஸ்த்ரங்களின் அநுவர்த்தந-அதிவர்த்தநங்களாலே புண்யபாபங்களைப் பெற்று அவ்வவற்றின் பயனாகிய சுகதுக்கங்களை அநுபவிப்பாருமாய், ஓரளவுபட்ட ஐச்வர்யங்களை யுடையவர்களாகச் சொல்லப்படுகையாலே அஸ்மதாதிகளைப்போலே, அல்லது நம்மைக் காட்டிலும் சிறிது மேம்பட்டவர்களாகவுள்ள தேவர்கள் ஜகத்காரணபூதர்களாயிருக்கத் தகுதியுடையரல்லர். * ஏகோ ஹ வை நாராயண ஆஸீத் ந ப்ரஹ்மா நேசாந: இத்யாதியாகவுள்ள மஹோபநிஷத்வாக்யத்தில் நாராயணனே மூலப்பொருளென்று ஸுஸ்பஷ்டமாக ஓதப்பட்டுளது. முந்துற உதாஹரிக்கப்பட்டுள்ள ச்ருதிவாக்யங்களில் ஸத், ப்ரஹ்ம, ஆத்ம பதங்களால் விவக்ஷிக்கப்பட்ட வஸ்து நாராயணனேயாக வடுக்கும். ஏன்? ஸர்வசாகாப்ரத்யயந்யாயத்தாலே காரண வாக்யங்களெல்லாவற்றுக்கும் ஏகவிஷயத்வம் வேண்டுகையாலே “ பசுநா யஜேத ” என்று நாற்கால் விலங்குகளையெல்லாம் சொல்லக்கடவதான [ஸாமாந்யமான] பசுசப்தம் சாகோ வா மந்த்ரவர்ணாத் என்கிற ஸூத்ரத்தின்படி சாகபசு ரூப விசேஷத்திலே பர்யவஸிக்குமாபோலே ஸத் ப்ரஹ்ம ஆத்ம பதங்கள் நாராயண ரூபவிசேஷத்திலே பர்யவஸித்துநிற்கும் இந்தத் தெளிவைத் தேவப்பெருமாள் அஹமேவ பரம் தத்வம். என்ற முதல்வார்த்தையினால் உண்டாக்கியருளினன்.

### 2. தார்சநம் பேத ஏவ ச.

இது நம் விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்திற்கு அந்தரங்கமானதொரு வார்த்தையாகும். உபநிஷத்துக்களில் "நெஹ நாநாஸ்தி கிஞ்சந" "ஸவஹ்ஂவஹ்லிஊஂஞூஹூ" இத்யாதிகளான வாக்கியங்கள் ப்ரஹ்மமொன்றேயுள்ளதென்றும் வேறு எந்தப்பொருளு மில்லையென்றும் தெரிவிக்கின்றன. "க்ஷாரஂவூயாந ஓஜூதாக்ஷாரஂஹாரஃ க்ஷாராத்மாநாவீஶதெ ஜைவணகஃ" "ஓாவஹவணூாவயஜா வஹவாயா" இத்யாதிகளான உபநிஷத் வாக்யங்களோவென்னில் சித்து அசித்து ஈச்வரன் என்ற மூன்று தத்வங்களும் உள்ளனவென்று தெரிவிக்கின்றன. ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள், முந்துறக்காட்டிய அபேத ச்ருதிவாக்யங்களையே முக்கியமாகக் கொண்டு அத்வைதக்கொள்கையை ப்ரவசனம் செய்தார்கள். அவர்களுடைய கொள்கையின்படி உண்மையில் ஒரு தத்துவமே உள்ளதென்றும் சேதந-அசேதந-ஈச்வரஹெஜைந தத்வத்ரயம் கிடையாதென்றும் தேறுகிறது. அது தவறு என்று காட்டுவது இந்த வார்த்தை. சேதநாசேதநங்கள் ஈச்வரனுக்கு ஶரீரங்களாகையாலே உலகத்தில் சரீர சரீரிகளை ஒற்றுமை நயத்தினாற் கூறும் வழக்கில் அபேத ச்ருதிகள் அவதரித்தனவே யல்லது உண்மையில் தனியே மூன்று தத்துவங்கள் இல்லையென்று மறுக்க வந்தவையல்ல. சரீராத்மபாவத்தாலே அபேதம் நிர்வஹிக்கப் படுகிறது. ஸஂஸாரத்தையோடு முக்தி தசையோடு வாசியற எங்கும் பாரமார்த்திகமாகவே ஜீவஶரஹெஜம் உண்டென்று இதனால் விளக்கிற்றாயிற்று. கம்ப ராமாயண யுத்தகாண்டக் காப்புச் செய்யுளில் "ஒன்றேயென்னின் ஒன்றேயாம் பலவென்றுரைக்கிற் பலவேயாம்" என்றதும் இதுபற்றியே யென்க.

### 3. உபாயேஷு ப்ரபத்திஸ் ஸ்யாத்.

பகவத்கீதை முதலிய சாஸ்திரங்களில் கர்மயோகம், ஜ்ஞாநயோகம், பக்தியோகம் ப்ரபத்தியோகம், எனப் பல உபாயங்கள் எம்பெருமானைப் பெறுதற்கு வழியாக வகுக்கப்பட்டுள்ளன. ப்ரபத்தி தவிர மற்ற உபாயங்கள் ஆகிஞ்சந்யமும் அநந்யகதித்வமுமே வடிவாகவுள்ள ஸ்ரீ வைஷ்ணவாதிகாரிக்கு ஸ்வரூபவிருத்தங்களாகையாலே ஸ்வரூபஜ்ஞர்களான அதிகாரிகள் அவ்வுபாயங்களை

அநுஷ்டிக்கத் தகுதியுடையாரல்லர்; "പ്രാപകാന്തരപരിത്യാഗத்துக்கு அஜ்ஞாந அശக்திகளன்று, ஸ்வரூப விரோதமே ப்ரதாந ஹேது" என்று ஸ்ரீவசந பூஷணத்தில் பிள்ளையுலகாசிரியர் அருளிச்செய்தபடிக்கும், "பத்தி முதலாமவற்றில் பதியெனக்குக் கூடாமல், எத்திசையு முழன்றோடியிளைத்து விழுங்காகம்போல், முத்திதரும் நகரேழில் முக்கியமாங் கச்சிதன்னில், அத்திகிரியருளாளர்க்கு அடைக்கல நான் புகுந்தேனே" என்று தேசிகன் பணித்தபடிக்கும் சரணாகதியே ஸ்வரூபோசிதமான உபாயமென்பது இந்த வார்த்தையின் கருத்து. முமுக்ஷுப்படியில் சரமச்லோகப்ரகரணத்தின் உபக்ரமத்தில் "கீழே சில உபாய விசேஷங்களை யுபதேசிக்க' என்று தொடங்கி அருளிச்செய்துள்ள சூர்ணையும் இங்கு நோக்கத் தக்கது.

## 4. அந்திமஸ்ம்ருதி வர்ஜநம்.

ப்ரபந்நாதிகாரிகள் சரீரவியோக மடையுங்காலத்தில் "மடிவழிவந்து நீர்ப்புலன்சோர வாயிலட்டிய கஞ்சியும் மீண்டே; கடைவழிவாரக்கண்ட மடைப்பக் கண்ணுறக்கமதாவது" இத்யாதிகளிற் சொல்லுகிறபடியே மனமொழி மெய்களாகிய கரணத்ரயமும் சிதிலமாய் எம்பெருமானை நினைக்கவும் முடியாதபடியிருந்து அப்படியே பிராணவியோகமாய்விட்டால் அன்னவர்களுக்கு ஸத்கதி கிடையாதோ? வென்று சங்கிக்கவேண்டா;

"സ്ഥിതേ മനസി സുസ്വസ്ഥേ ശരീരേ സതി യോ നരഃ |
ധാതുസാമ്യേ സ്ഥിതേ സ്മര്താ വിശ്വരൂപം ച മാമജം ||
തതസ്തം മ്രിയമാണം തു കാഷ്ഠപാഷാണ സന്നിഭം |
അഹം സ്മരാമി മദ്ഭക്തം നയാമി പരമാം ഗതിം ||" என்கிற

வராஹசரமச் லோகத்தின்படிக்கும் "எய்ப் பென்னைவந்து நலியும் போது அங்கேது நானுன்னை நினைக்க மாட்டேன், அப்போதைக்கிப்போதே சொல்லிவைத்தேன் அரங்கத்தரவணைப் பள்ளியானே", என்ற அருளிச் செயலின்படிக்கும், யோக்யகாலங்களில் மநோவாக்காயங்களை நல்வழிப்படுத்தின மஹான்களுக்கு சரீராவஸாநகாலத்தில் நல்லஸ்மரண மில்லை யாயினும் குற்றமில்லை யென்பது இந்த வார்த்தையின் கருத்து. "அந்திம ஸ்ம்ருதிவர்ஜநம்" என்றிருப்பதால் அந்திம காலத்தில் ஸ்மரணம் இருக்கவே கூடாதென்று நிஷேதிப்பதாகச் சிலர் பொருள் கொள்ளக் கூடும். அது

வன்று பொருள். அந்திமஸ்மிருதி இருந்தே தீரவேணுமென்கிற நிர்ப்பந்தமில்லை—என்னுமளவிலேயே இதற்குத் தாத்பரியமாகும்.

5. தேஹாவஸாநே மோக்ஷஸ்ஸ்யாத்:—

ப்ரபந்நாதிகாரிகளுக்கு ப்ராரப்தகர்மாநுபவ ஶேஷம் இருக்குமாகில் அதனை யநுபவித்துத் தீர்ப்பதற்காக மீண்டும் பிறத்தல் வேண்டியிருக்குமோ என்கிற ஶங்கையைத் தவிர்ப்பது இந்த வார்த்தை. சாந்தோக்யோபநிஷத்தில் (6—14) "தஸ்ய தாவ தேவ சிரம் யாவந்ந விமோக்ஷ்யே அத ஸம்பத்ஸ்யே" என்று ஓதியுள்ளபடியே வர்த்தமாந சரீரத்தின் முடிவோடு ப்ராரப்தகர்மங்களின் அநுபவத்தினுடைய முடிவையும் எம்பெருமான் ஸங்கல்பித்து "மரணமானால் வைகுந்தங் கொடுக்கும் பிரான்" என்கிறபடியே மறுபிறவியற அநுக்ரஹித்தருள்வது திண்ண மென்றபடி. இவ்வுறுதியைத் திருவுள்ளம் பற்றியே தேசிகனும் "ஸதேஹாவஸாநே ஶரண்யம் ப்ராபய ஸ்வயம்" என்று நியாஸ தசகத்திலும் "தநுப்ரவிஷயப்ராப்தி தேஹாந்தரா" என்று நியாஸதிலகத்திலுமருளிச் செய்தனர்.

6. பூர்ணாசார்யஸமாச்ரய:—

எந்த ஆசிரியர் திருவடிகளில் ஆச்ரயித்து உய்வதென்று எம்பெருமானார் திருவுள்ளத்திலிருந்த சிந்தனைக்கு ஸமாதாநமாகப் பெரிய நம்பி திருவடிகளில் ஆச்ரயிக்க வடுக்கு மென்று இதனால் தெளிவித்தபடி.

இன்னமும் நம்பிகளின் பெருமைகள் பலவுண்டு. வல்லார் வாய்க் கேட்டுணர்க.

"ஶ்ரீகாஞ்சீபூர்ணமிஶ்ரேண ப்ரீத்யா ஸர்வாபிபாஷிணே ।
அதீதார்சாவ்யவஸ்தாய ஹஸ்த்யத்ரீஶாய மங்களம் ॥"

என்கிற மணவாளமாமுனிகளின் திவ்யஸூக்தியை அநுஸந்தித்து இவ்வளவிலே நிற்போமாக.

# ஸ்ரீமத் வேதாந்த தேசிகன்.

---

(ஸ்ரீகாஞ்சீ. பிரதிவாதி பயங்கரம். அண்ணங்கராசாரியரின் உபந்யாஸ ஸங்க்ரஹம்.)

[20-ம் பக்கத்தின் தொடர்ச்சி.]

(2)

## பிருதாவளிகள் பெறுதல்.

ஸ்வாமி தேசிகனுக்கு வேதாந்தா சார்யர் என்றும், கவி தார்க்கிக கேஸரி யென்றும், ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரர் என்றும், ஸமஸ்யா ஸஹஸ்ரீ என்றும் இங்ஙனே பல பிருதுகள் ப்ரஸித்த மாய் நிகழ்ந்தன. இவற்றுள், வேதாந்தா சார்யர் என்கிற பிருது ஸ்ரீரங்கநாதனால் அளிக்கப்பட்ட தென்னுமிடம் ஸ்வாமியின் திவ்ய ஸூக்திகளினாலேயே தெரியவருகின்றது. ஸங்கல்பஸூர்யோதய ப்ரஸ்தாவனையில்—“ஸ்ரீரங்கராஜ திவ்யாஜ்ஞாலப்த வேதாந்தாசார்யபத:” என்றும், அதிகரண ஸாராவளியின் தொடக்கத்தில் “ஸ்வஸ்தி ஸ்ரீரங்கபர்த்து:” என்னும் ச்லோகத்தில் “தேநதேந தத்தாம் வேதாந்தாசார்ய ஸம்ஜ்ஞாம்” என்றும் அருளிச் செய்யப்பட்டுள்ளவை காண்க. ஸ்தோத்ர பாஷ்யத்தின் முடிவில் “ஸ்லாகிதி ஹரிதத்தம் யாமுநஸ்தோத்ர பாஷ்யம் வ்யாதநோத் நிகமாந்தாசார்யகம் வேங்கடேச:” என்ற ச்லோகத்தில் ஹரிபதத்தினாலும், தயாசதகத்தின் முடிவில் “வேதாந்ததேசிகபதே விநிவேஸ்ய பாலம் தேவோ தயாசதகமேதத் அவாதயந்மாம்” என்ற ச்லோகத்தில் தேவபதத்தினாலும் ஸ்ரீரங்கநாதனே குறிக்கப்படுகிறாரென்றும் கொள்ளக் கடவது. பதேத்யுக்த்தால் ஸமந்வயம் காண்க.

ஸர்வதந்த்ர ஸ்வந்த்ரர் முதலிய மற்ற பிருதுகள் வித்வான்களால் அளிக்கப்பட்டன. இதுவும் ஸ்ரீதேசிக திவ்ய ஸூக்திகளினாலேயே தெரிகின்றது; ஸங்கல்ப ஸூர்யோதயத்தில் மேலே குறித்த விடத்தில் “கவிதார்க்கிகஸிம்ஹ இதி வ்யாஹ்ருத குணஸாரஸ்ய:”, என்றும், ஸ்தோத்ர பாஷ்ய ஸமாப்தியில் “க்ஷமணி ஸதஸி ஸ்வீயஸ்ஸேத்யாவஹஸீ கவிகதகஸ்ரேணீந்த்ர ஸ்வதந்த்ர ஸ்வதந்த்ர:” என்று முள்ள ஸ்ரீஸூக்திகள் காண்க. ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரர் என்கிற பிருது ஸ்ரீரங்க நாச்சியாரால் அளிக்கப்பட்ட தென்றுஞ் சொல்லுவதுண்டு.

ஸமஸ்யா ஸஹஸ்ரீ என்கிற பிருது மற்ற பிருதுகளைப் போல் ஸுப்ரஸித்தமாக ஸ்வாமிக்கு வழங்குவதில்லை யாயினும், அக் காலத்தில் ஸதஸ்ஸுகளில் வித்வான்களால் வழங்கி வரப்பட்ட தென்று விளங்குகின்றது. ஒரு ச்லோகத்தின் ஏகதேசத்திற்கு 'ஸமஸ்யா' என்று பெயர். ஸமஸ்யா பூரணம் என்பது மஹா கவி களின் கோஷ்டிகளில் ப்ரஸித்தம். ஒருவர் ஒரு பாதத்தையோ சில பதங்களையோ தாம் கவனஞ் செய்து வெளியிட்டால், மற்றொரு வர் அப்போதே பூர்ண ச்லோகமாம்படி அதனைப் பூர்த்தி செய்து வெளியிடுதல் ஸமஸ்யா பூரண மெனப்படும். இங்கு இதற் கொரு சிறு த்ருஷ்டாந்தம் காட்டுவோம்;—"குலீரகுஹரே கரீ ஹரிமஹாநதி ஹநூநநு" என்று ஒருவர் ஸமஸ்யை கொடுத்தால், அந்த ஒரு பாதத்திற் கூறப்பட்டுள்ள பொருளை உபபந்நமாம்படி நிரூபித்து ச்லோக பூரணம் செய்வது ஸமஸ்யா பூரணமாகும். மேற்குறித்த ஸமஸ்யையின் பொருளாவது—ஒரு யானையானது நண்டுவளையில் இருந்து கொண்டு சிங்கத்தைக் கொல்லுகின்றது என்பதாம். யானை சிங்கத்தைக் கொல்வது அஸம்பாவிதம். அது நண்டு வளையில் இருந்து கொண்டு அச் செயலைச் செய்கிற தென்பது ஸுதராம் அஸம்பாவிதம். இப்படிப் பட்ட விசித்திரப் பொருளை அமைத்து ஸமஸ்யை கொடுத்து விட் டாலும் மஹா கவிகள் புத்தி சமத்கார விசேஷத்தினால் இது ஸமந்விதமாம்படி பூரணம் செய்து விடுவார்கள். கவிகளுக்கு இது வொரு விநோதமான போது போக்கு.

தேசிகன் ஸமஸ்யைகள் கொடுப்பதிலும், பிறர் கொடுக்கும் ஸமஸ்யைகளைப் பூரணம் செய்வதிலும் நிகரற்ற வல்லவர் என்பது விளங்க இவர்க்கு "ஸமஸ்யா ஸஹஸ்ரீ" என்ற விருது தோன்றிய தென்பர். அங்ஙனே ஸ்வாமி அருளிச் செய்த ஸமஸ்யைகளோ தத்பூரணங்களோ இப்போது ஒன்றும் கிடைக்காததனால் லுப்தங் களாயின வென்று சொல்லக் கேள்வி.

## கிணறு கட்டுதல்.

ஸ்வாமி ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரரென்று பிருது வஹித்து விளங்கிவந்ததில் பொறாமை கொண்ட ஒரு கொத்தன், ஸ்வாமி திருவயிந்திரபுரத்தில் எழுந்தருளியிருக்கும் போது ஒரு நாள் அருகே வந்து, தேவரீர் எல்லாக் காரியங்களும் செய்ய வல்லமை பெற்றிருந்தாலன்றோ ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரரென்று விருதுதிப்

புறப்படலாம்; நான் கிணறு கட்டுவேன்; அது கட்ட உமக்குத் தெரியாதல்லவோ? அப்படியிருக்க அந்த விருதை நீர் எங்ஙனே வஹிக்கலாம்?' என்று க்ஷேபிக்க, ஸ்வாமியும் புன்முறுவல் செய்துகொண்டே அவன் முன்னிலையிலேயே ஒரு கிணறு நிர்மாணஞ் செய்து அவனது செருக்கை யடக்கினர். இந்தக் கிணறு நாளைக்கும் பக்தர்கள் ஸேவிக்கக் கூடிய நிலைமையிலுள்ளது.

### பாம்பாட்டியை வென்றது.

மற்றொருகால் ஒரு பாம்பாட்டி, ஸ்வாமி ஸந்நிதானத்தில் விடை கொண்டு 'நீர் ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரராகில் கொடிய பாம்புகளை ஆணையிட்டுக் கட்டுந்திறனும் உமக்குத் தெரிந்திருக்க வேண்டுமே; அந்த வல்லமையைக் காட்டுவீராகில் நீர் மெய்யே ஸர்வதந்த்ர ஸ்வதந்திரரே' என்று சொல்லிக் கொண்டே தான் ஜீவனார்த்தமாக வைத்திருந்த சில பாம்புகளைப் பெட்டியில் நின்றும் திறந்து விட, அவையும் சீறிக்கிளம்ப, அப்போது ஸ்வாமி இனி,!தாம் வெறுமனிருக்கலாகாதென்று கருதி ஸ்ரீவைநதேய மந்த்ர ஜபத்துடனே தம்மைச் சுற்றிச் சில கோடுகள் போட, மிகக் கொடிய ஒரு ஸர்ப்பம் மாத்திரம் கோடுகளைக் கடந்து ஸ்வாமியை நெருக்கின வளவிலே, ஸ்வாமி உடனே ஹ்ருதயத்தினால் பக்ஷிராஜனை ஆஹ்வாநம் செய்தருள, அவனும் சடக்கென வந்து தோன்றி அந்த அரவங்களைக் கவ்விக்கொண்டு அகலவே, பாம்பாட்டி தான் பங்கப் பட்டது மல்லாமல் தனது ஜீவனார்த்தமாக வைத்திருந்த பாம்புகளும் தொலைந்ததனால் பரிதாபம் மிக்கு ஸ்வாமி திருவடிகளிலே விழுந்து வேண்டிக்கொள்ள, ஸ்வாமியும் திருவுள்ளமிரங்கி மீண்டும் அந்தப் பாம்புகள் அவனுக்குக் கிடைக்குமாறு அநுக்ரஹஞ் செய்தருளினர்.

### திருக்குமாரர் திருவவதரித்தல்.

ஸகல வகைகளாலும் ஸ்வாமியை நிகர்த்தவரான ஒரு திருக்குமாரர் நள ஸம்வத்ஸரம் ஆவணி மாதத்து ரோஹிணீ நக்ஷத்ரத்தில் திருவவதரிக்க, அவர்க்கு வரதாசாரியர் என்று திருநாமமிடப்பட்டது. இவரும் ப்ராப்த காலங்களில் உபநயநாதி ஸம்ஸ்காரங்களைப் பெற்று "யஸ்யாதெவ யோ லவஃ ஶாஸ்ரமேரூாஹி நாநூஃ" என்று இவர்தாமே பேசியுள்ளபடி ஸ்வாமி ஸந்நிதியிலேயே ஸகல சாஸ்த்ரார்த்தங்களையும் அதிகரித்து விளக்கில் கொளுத்தின தீவட்டி போலே விளங்கி வந்தார். (தொடரும்)

ஸ்ரீ

## ஒரு விண்ணப்பம்

வைஜயந்தி சந்தாதாரர்களிற் சிலர் ஸமஸ்க்ருத பாஷையி லும் சில விஷயங்கள் வெளிவந்தால் நலமாயிருக்கு மென்று அபிப்ராயப் பட்டதை உத்தேசித்தும் நமது ஸித்தாந்தத்திற்கு தென் கலையும், வட கலையும் இரண்டு கண்கள் போல இன்றி யமை யாததாயிருத்தலையும் உத்தேசித்து ஸமஸ்க்ருதாலாப சர்ச்சா என்று ஒரு பாகம் தமிழில் பொருள் விளக்கத்துடன் சென்ற தைமாத ஸஞ்சிகை தொடங்கி அச்சிடப்பட்டிருக்கிறது. மேலும் ஸ்ரீ. உ. வே. அநந்தாண் பிள்ளை கோவிந்தப்பங்கார் ஸ்வாமி அநுக்ரஹிக்கும் ஸ்ரீ ராமாயண ஶ்லோகார்த்தம், சில ஶ்லோ கங்களுக்கே யாயிருந்தது. ஸம் க்ஷேப ராமாயண ஶ்லோகங்க ளெல்லாவற்றையுமே அவ்வாறு அச்சிட வேண்டுமென்று மற்றும் சிலர் கருதியபடி அந்த ஸ்வாமியினால் அநுக்கிரஹிக்கப் படாத சில ஶ்லோகங்களுக்கு உரை அடியேனால் எழுதப்பட்டு வந்தது. அதற்குமேல் ஸ்ரீகோவிந்தராஜர் வியாக்யாநத்தையும் அத்துடன் சேர்த்து ப்ரசாரம் செய்தால் ஸம்ஸ்கிருத பாஷையில் பரிசயத் தைப் பண்ண ஆவலுடையார்க்கு மிகவும் உபயோகமாயிருக்கு மென்று நினைத்து ஸம்ஸ்கிருத பாஷாமயமான கோவிந்தராஜர் வ்யாக்யாநமும் அச்சிடப்படுகிறது. —பத்திராதிபர்

---

## संस्कृतालापचर्चा ।

**प्रत्यहं भगवत्सद्मसेवनम् भृशमुत्तमम् ।**

தினந்தோறும் தேவாலயம் தொழுவது சாலவும் நன்று.

---

## परमभक्तचरितम् ।

1. **मधुपुरी नाम कश्चिदग्रहारः**—மதுபுரீ என்கிற ஒரு அக்ரஹாரம் (இருந்தது)
2. **तत्र प्रतीच्यां दिशि कोऽपि देवालयो लघीयान्**— அதில் மேற்கு திக்கில் ஒரு தேவாலயம் சிறியதாக (இருந்தது)
3. **नासीत् तत्र विग्रहाराधनम्** அக் கோயிலில் விக்ரஹாராதனம் நடை பெறுவதில்லை.

4. **कस्य देवस्यायमालय इति नावगम्यते** எந்த தேவதையினுடைய ஆலய மென்று அறியப்படவில்லை.

5. **तस्मिन्नग्रहारे कश्चन कुटुम्बी वर्तते स्म** அந்த அக்ரஹாரதில் ஒரு கிரஹஸ்தனிருந்தான்.

6. **तस्य नामधेयं परमभक्तः** அவனுடைய பெயர் பரமபக்தன்.

7. **निर्दिष्टपूर्वदेवालयं प्रति स प्रत्यहं प्रयाति.** முன் குறிப்பிடப்பட்ட தேவாலயத்தைக் குறித்து அவன் தினந்தோறும் போய்க் கொண்டிருந்தான்.

8. **बहिरेव स्थित्वा स्तुत्वा प्रणमति पुनः प्रतिनिवर्तते स्वं सदनम्** வெளியிலேயே நின்று ஸ்தோத்திரம் பண்ணி வணங்குவான் மறுபடியும் திரும்புவான் தன்னுடைய கிரஹத்தைக்(குறித்து.)

9. **आग्रहारिकास्सर्वेऽपि तं परिहसन्ति** அக்ரஹாரத்திலுள்ளாரனைவரும் அவனை பரிஹஸிப்பார்கள்.

10. **अथापि स नैव त्यजति नित्यक्रममिमम्** ஆனாலும் அவன் விடுவதே கிடையாது இந்த நித்யக்கிரமத்தை.

11. **काले गते तं देवालयं तत्पार्श्वस्थितां भूमिं च स क्रीणाति स्म** (இவ்வாறு) காலம் செல்லாநின்ற வளவில் அந்த தேவாலயத்தையும் அதன் பக்கத்திலிராநின்ற பூமியையும் அவன் கிரயம் வாங்கினான்.

**उद्यानवनम् परिकल्पयामास** (அதை) உத்யாநவநமாகப் பண்ணுவித்தான்.

12. **तत्र कश्चित् अन्धकूप आसीत्** அங்கொரு பாழ்ங்கிணறிருந்தது

13. **स तं परिष्कर्तुमैच्छत्** அவன் அக்கிணற்றை பரிஷ்கரிக்க விரும்பினான்.

14. **कदाचिदयं परमभक्तस्सुष्वाप** ஒருகால் இந்த பரமபக்தன் அயர்ந்து நித்திரை செய்தான்.

15. **स्वप्ने कश्चन महान् एवमुवाच** ஸ்வப்நத்தில் ஒரு மகா புருஷன் பின்வருமாறு சொன்னார்.

16. **"त्वया परिष्कर्तुमिष्टे शून्यकूपे अपरिमितद्रव्यभरितो निधिरास्ते अर्धं भवता स्वीक्रियताम्। अर्धं देवालयार्थमस्तु। कूपे भगवद्विग्रहोऽपि वर्तते" इति।** உன்னால் செப்பனிட விரும்பப் பட்ட பாழ்ங்கிணற்றில் அளவற்ற திரவியங்கள் நிறைந்த

புதையலுள்ளது. பாதி உன்னால் கிரகிக்கப்படட்டும். பாதி தேவாலயத்தின் பொருட்டு ஆகட்டும். கிணற்றில் பகவானுடைய விக்ரஹமும் இருக்கின்றது என்று.

17. **अपरेद्युः परमभक्तः कूपं खनति स्म** மறுநாள் பரமபக்தன் கிணற்றைத் தோண்டினன். **यथोक्तमासीत्** சொன்னபடியே இருந்தது.

18. **सच यथोदितमेव चकार** அவனும் கட்டளைப்படியே செய்தான்.

19. **भगवन्मन्दिरं सुष्ठु निर्मापितमासीत्** தேவாலயம் செவ்வையாக நிர்மாணிக்கப்பட்டது.

20. **विग्रहाराधनं च विशेषतस्संपद्यते** விக்ரஹாராதநமும் விசேஷமாக நடைபெறுகின்றது.

21. **उत्सवादिकं विजृंभते** உத்ஸவம் முதலானதும் விருத்தியடைகின்றது.

22. **सोऽपि महान् इभ्यस्समजनि** அவனும் பெரிய தனிகனாக ஆனான்.

23. **तस्मात्—प्रत्यहं भगवत्सद्मसेवनं भृशमुत्तमम्—**

— —

# வித்வான்களுக்கு ஓர் விண்ணப்பம்

(ஸ்ரீகாஞ்சீ. ப்ர. அண்ணங்கராசாரியர்)

ஸஹஸ்ர நாமத்தில் *அம்ருத: ஶாஶ்வத: ஸ்தாணுர்வராரோஹோ மஹாதபா:* என்ற விடத்தில் வராரோஹ: என்ற திருநாமத்திற்கு மிக விரிவாக பாஷ்ய மருளிச் செய்யா நின்ற பட்டர் (ஸஹஸ்ரநாம பாஷ்யத்தில்).

“ அத: ஶ்ரீஜநார்தநஸ்ய வதாஶ்ரவாதிவ்யூஸம்ப: ஶ்ரீவத்ஸ்ய வ்யாக்யாநஸ்ய விஶேஷிதயா அதஸ்யாவதி பாஸ்யோர்ந்தஸம்ப்ரயே: ஸாவஸ்யாஶோஹஸஸ திரோஹிதஸாம்ஸ்வணிதந்யாய: வணிதம்ஶ்ந்யாநாம். ஸர்வம் சைதத் தத்தத் ஸ்தாபயிஷ்யதே ”

என்கிற ஸ்ரீஸூக்திகளை அருளியிருக்கக் காண்கிறோம். மேற்குறித்த வாக்ய ராசியில் * திரோஹிதஸாம்ஸ் வணிதந்யாய: வணிதம்ஶ்ந்யாநாம் * என்பதற்கு இன்னது பொருளென்றே

விளங்கவில்லை. மஹான்களைக் கேட்டால் "பங்க்தி அப்படியிராது, பாடம் மாறுபட்டிருக்கும்" என்றிவ்வளவே ஸாதித்து விடுகிறார்கள். இதை நன்கு விமர்சித்துத் தெளிவு பிறப்பிக்க வேணுமென்று வித்வச்சிகாமணிகளை ப்ரார்த்திக்கின்றேன்.

---

## வர்த்தமானங்கள்

ஸ்ரீரங்கம் பங்குனி 3. (16-3-37) திருமுளை 17-3-37 நகர சோதனை 18-3-37. ஆதிப்ரஹ்மோத்ஸவ ஆரம்பம். த்வஜாரோஹணம். 3-வது உத்ஸவம் ஜீயர்புரம் அம்மையார் தண்ணீர்ப்பந்தல். 4-வது ரெட்டியார் மண்டபம் ராத்திரி கருட சேவை. 5-வது ஆதிசேஷன் கல்பவிருக்ஷம். 6-வது உறையூர். 7-வது சூர்ணாபிஷேகம். நெல் அளவு. உபயநாச்சிமாரோடு பூந்தேர். நாச்சியார் ஸந்நிதியில் திருமஞ்சனம். 8-வது எல்லைக் கரை மண்டபம் பாரிவேட்டை 9-வது காலை பல்லக்கு தாயார் ஸந்நிதியில் ப்ரணயகலஹம். ஆழ்வார் எழுந்தருளி ஸமாதாநம். கத்யத்ரயகோஷ்டி. சாற்றுமுறை திருமஞ்சநம். கோரதம். 10-வது ஸப்தாவணம். உடையவர் ஸந்நிதிக்கெழுந்தருளுதல். த்வஜாவரோஹணம்-பங்குனிஹஸ்தம் திருவரங்கத்தமுதனார். பங்குனி 15 (28-3-37) விடாயாற்றி ஆளும் பல்லக்கு-7-4-37. ஸர்வ ஏகாதசி திருமஞ்சநம் 10-4-37. அமாவாஸ்யை 11-4-37 ரேவதி-ரேவதீ மண்டபத்தில் திருமஞ்சனம்-பங்குனி 30-(12-4-37) ஸம்வத்ஸராதி ஆழ்வாராசாரியர்கள் எழுந்தருளிய பிறகு புறப்பாடு திருமஞ்சநம் புதுப்பஞ்சாங்கம் வாசித்தல்.

திருநாராயணபுரம். (மேலக்கோட்டை) பங்குனி 9 (22-3-37) வைரமுடி ஸேவை.

வானமாமலை. பங்குனி 12 (25-3-37) தங்கக்கோரதம்.

மன்னார்குடி: பங்குனி 4 (17-3-37) வெண்ணெய்த்தாழி 18-3-37 திருத்தேர்.

ஸ்ரீ வில்லிபுத்தூர்: 13 (26-3-37) ஆண்டாள் திருக்கலியாணம்.

ஸ்ரீ பெரும்பூதூர்: பங்குனி 25 (7-4-37) உடையவர் உத்ஸவ ஆரம்பம்,

(பரதன் முதலானவர்களால் நீயே அரசாள வேண்டும் என்று வேண்டிக்கொண்டாலும்) ராஜ்யபோகங்களில் பற்றில்லாதவனுயுமிருக்கிற ராம:—இராமன், நாகரஸ்ய ஜநஸ்ய—நகரத்திலுண்டான ஜநங்களுடைய தத்ர—அந்த சித்ர கூட பர்வதத்தில் புந: ஆகமநம் ஆலக்ஷ்ய—மறுபடியும் வரவை ஆலோசித்து (அந்ததேசத்தை விட்டு) ஏகாக்ர:—பித்ருவசநபரிபாலநமொன்றையே முடிவாகக் கொண்டவனுய், அன்றிக்கே விரோதிகள் மலிந்திராநின்ற தேசமானதால் மிகவும் ஜாகரூகனுய், தண்டகாந் (தண்டகன் என்கிற அரசனுக்கு வாஸஸ்தானமாயிருந்த நகரம் சுக்ர சாபத்தால் காடாயிற்றுனுலும் அக்காட்டிற்கு தண்டகாரண்ய மென்றே வழங்கப் பட்டு வருகிறது. அந்த, தண்டகாவநத்தை ப்ரவிவேச அடைந்தான்—ஹ என்று ருஷி வருந்துகிறுர்.

இவ்வளவாக ஸ்ரீராமனுடைய விருத்தாந்தத்தால் பித்ருவசநபரிபாலநரூப ஸாமாந்ய தர்மமும், பரதாழ்வானுடைய விருத்தாந்தத்தால் சேஷ பூதனுக்கு சேஷி விஷயமான கைங்கர்ய வ்ருத்தியே ஸ்வரூபமென்பதும், ப்ரபந்நனுடைய பகவத்பாரதந்த்ரியமும், ஸ்ரீ சத்ருக்நாழ்வானுடைய விருத்தாந்தத்தால் பாகவத பாரதந்த்ரியமும் ஸூசிப்பிக்கப்பட்டது.

𑌪𑍍𑌰𑌵𑌿𑌶𑍍𑌯 𑌤𑍁 𑌮𑌹𑌾𑌰𑌣𑍍𑌯𑌂 𑌰𑌾𑌮𑍋 𑌰𑌾𑌜𑍀𑌵𑌲𑍋𑌚𑌨𑌃
30 𑌵𑌿𑌰𑌾𑌧𑌂 𑌰𑌾𑌕𑍍𑌷𑌸𑌂 𑌹𑌤𑍍𑌵𑌾 𑌶𑌰𑌭𑌙𑍍𑌗𑌂 𑌦𑌦𑌰𑍍𑌶 𑌹
𑌸𑍁𑌤𑍀𑌕𑍍𑌷𑍍𑌣𑌂 𑌚𑌾𑌪𑍍𑌯𑌗𑌸𑍍𑌤𑍍𑌯𑌂 𑌚 𑌅𑌗𑌸𑍍𑌤𑍍𑌯𑌭𑍍𑌰𑌾𑌤𑌰𑌂 𑌤𑌥𑌾

ப்ரவிஶ்யது மஹாரண்யம் ராமோ ராஜீவலோசந:
விராதம் ராக்ஷஸம் ஹத்வா ஶரபங்கம் ததர்ஶ ஹ
ஸுதீக்ஷ்ணம்சாப்ய கஸ்த்யம்ச அகஸத்ய ப்ராதரம் ததா.

𑌰𑌾𑌮𑌃 𑌮𑌹𑌾𑌰𑌣𑍍𑌯𑌂 𑌪𑍍𑌰𑌵𑌿𑌶𑍍𑌯 𑌰𑌾𑌜𑍀𑌵𑌲𑍋𑌚𑌨𑌃 𑌕𑌮𑌲𑌵𑌤𑍍 𑌸𑌂𑌸𑍍𑌥𑌾𑌨𑌵𑌿𑌧𑌿𑌨𑌵𑌿𑌮𑍋𑌕𑌜𑌨𑌿𑌤𑌕𑍁𑌤𑍂𑌹𑌲𑍇𑌨 𑌵𑌿𑌕𑌸𑌿𑌤 𑌨𑌯𑌨𑌾𑌰𑌵𑌿𑌨𑍍𑌦𑌃 𑌤𑍇𑌨𑍈𑌵 𑌉𑌤𑍍𑌸𑌾𑌹𑍇𑌨 𑌵𑌿𑌰𑌾𑌧𑌂 𑌰𑌾𑌕𑍍𑌷𑌸𑌂 𑌹𑌤𑍍𑌵𑌾 𑌤𑌦𑌨𑌨𑍍𑌤𑌰𑌂 𑌉𑌪𑌹𑌾𑌰𑍀𑌕𑍃𑌤𑍍𑌯 𑌶𑌰𑌭𑌙𑍍𑌗𑌂 𑌦𑌦𑌰𑍍𑌶 | 𑌤𑌦𑌨𑍁𑌜𑍍𑌞𑌯𑌾 𑌸𑍁𑌤𑍀𑌕𑍍𑌷𑍍𑌣𑌂 𑌚 𑌅𑌗𑌸𑍍𑌤𑍍𑌯𑌂 𑌚 𑌸𑍁𑌦𑌰𑍍𑌶𑌨𑌾𑌵𑌶𑍍𑌯𑌂 𑌅𑌗𑌸𑍍𑌤𑍍𑌯𑌭𑍍𑌰𑌾𑌤𑌰𑌂 𑌚 𑌦𑌦𑌰𑍍𑌶-𑌋𑌷𑌿𑌵𑌾𑌦𑌃.

𑌤𑌤𑍍𑌰 𑌶𑍍𑌲𑍋𑌕𑍇—𑌵𑌿𑌰𑌾𑌧𑌵𑌧𑌾𑌨𑌨𑍍𑌤𑌰𑌮𑍇𑌵 𑌶𑌰𑌭𑌙𑍍𑌗𑌾𑌶𑍍𑌰𑌮𑌨𑍋𑌕𑍍𑌤𑍍𑌯𑌾 𑌵𑌿𑌰𑌾𑌧𑌵𑌧𑌸𑍍𑌯 𑌶𑌰𑌭𑌙𑍍𑌗𑌾𑌶𑍍𑌰𑌮𑌸𑍍𑌯𑌾𑌨𑍇 “𑌋𑌕𑍍𑌷𑌹𑌸𑍍𑌤𑍇𑌨

நோபேயாத் ராஜாநம் தைவதம் குரும்" இத்யுக்தஶாஸ்த்ரார்த்த பாலநம் வ்யஜ்யதே.

இராமன், (அநேக விதமான விருக்ஷஸமூஹங்கள் அடர்ந்திரா நின்ற) பெரிய காட்டையடைந்து, அபூர்வமான ஸந்நிவேஶங்களைப் பார்ப்பதாலுண்டான ஆநந்தத்தால் அலரா நின்ற தாமரைக் கண்களையுடையனாய், அந்த உத்ஸாஹத்தினாலேயே விராதன் என்கிற ராக்ஷஸனைக்கொன்று, அவனுடைய வதத்தைக் காணிக்கையாகக் கொண்டு; ஶரபங்க மஹருஷியைக் கண்டார். அவருடைய ஆஜ்ஞையினால், ஸுதீக்ஷ்ணரையும் ஸுதர்ஶநர் என்கிற அகஸ்த்யரின் ஸஹோதரரையும் கண்டார். தனி—விராதனைக் கொன்று ஶரபங்கரைக் கண்டார் என்றதால் விராதவதம், ஶரபங்கர் முதலான ருஷிகளைக் காண்பதற்கு "அரசனையும் 'தெய்வத்தையும் பெரியோரையும் வெறுங்கையோடு அடையக் கடவனல்லன்" என்று ஶாஸ்த்ரங்களில் விதிக்கப் பட்ட காணிக்கையாக வாயிற்று என்பது தோற்றுநிற்கின்றது.

32 அகஸ்த்யவசநாச்சைவ ஜக்ராஹைந்த்ரம் ஶராஸநம்
கட்கம் ச பரமப்ரீத: தூணீ சாக்ஷயஸாயகௌ

அகஸ்தயவசநாச்சைவ ஜக்ராஹைந்த்ரம் ஶராஸநம்
கட்கம்ச பரமப்ரீத: துணீசாக்ஷய ஸாயகௌ

(ராம:) பரமப்ரீத: ஜகதேகவீரஸ்ய ஸ்வஸ்ய ஸத்ருஶாயுதலாபாத் ஸஞ்ஜாதஹர்ஷ: ஸந், அகஸ்த்யவசநாத் ஏவ (ந து ஸ்வப்ரார்த்தநாத்) ஐந்த்ரம்-இந்த்ரதத்தம், (ஶராஸ்த்ரயோ: அபேக்ஷா இதி) ஶராஸநம்-தநு: கட்கம் ச அக்ஷயஸாயகௌ-ஸர்வஸ்மிந் ஸஹஸ்ரஶோ விநிர்யாத் அக்ஷயஶரௌ தூணீ-நிஷங்கௌ ஜக்ராஹ—ஸ்வீக்ருதவாந் | வசநாச்சேத்யநேந அகஸ்த்ய: ஸ்வாதீநம் ந ஸ்வயம் த்ருஷ்டவாந் கிம் தர்ஹி இஷ்டவாநித்யுச்யதே.

இராமன், ஜகதேக வீரனான தனக்குத்தகுந்த ஆயுதங்களையடையப்பெற்றதாலுண்டான நிரவதிகமான ஆனந்தத்தை யுடையனாய்க்கொண்டு அகஸ்த்யரின் ஆஜ்ஞையினாலேயே (தான் ப்ரார்த்திக்காமலே) இந்த்ரனால் கொடுக்கப்பட்ட (பாணங்களை யிரைக்

கப்படுவதால் ஶராஸநம் என்று சொல்லப்படுகிற) வில்லையும், கத்தியையும், (யுத்தத்தில் ஆயிரக்கணக்காக அள்ளியிறைத்தாலும் குறையாத பாணங்களை யுடைய அம்பறாக் கூடுகளையும் அங்கீகரித்துக் கொண்டான். அகஸ்த்ய வசநத்தால் அங்கீகரித்துக் கொண்டான் என்றதால், கத்தி முதலான ஆயுதங்களை ஆகஸ்த்யர் எடுத்துக் கொள் என்று காட்டினாரே யல்லாமல் தொட்டு எடுத்துக் கொடுக்கவில்லை யென்பது சொல்லப்படுகிறது.

33 [illegible]

[illegible]

வஸதஸ் தஸ்ய ராமஸ்ய வநே வநசரைஸ் ஸஹ
ருஷயோப்யாகமந் ஸர்வே வதாயாஸுர ரக்ஷஸாம்

[illegible]

[illegible]

அவ-இந்தப்ரகாரம் விரோதி நிரஸநந்திற்கு (அழிக்கைக்கு) பெருமாளின் ஆநுகூல்யத்தை யறிந்தவளவில், அடையப்பட்ட அவஸரத்தை யுடைய முநிஜநங்களின் ப்ரார்த்தனையைச் சொல்லுகிறார். வஸத: என்கிற ஶ்லோகத்தால்.

ஶரபங்கவநத்தில் வஸியாநின்ற அந்தராமனுடைய (ஸமீபத்தை) ஸமஸ்தமானவாலகில்யாதி மஹரிஷிகள், சித்ரகூட பம்

பாவநம் முதலான வநங்களில் வஸியாநின்ற ருஷிகளோடு கூட, அன்றிக்கே, வநவாஸிகளோடுகூட வநத்தில் வசியாநின்ற ராம னுடைய ஸமீபத்தை, ஸமஸ்தமான ருஷிகளும், அஸுரப்ருக்ருதி களான ராக்ஷஸர்களுடைய, இத்தால் ராக்ஷஸ குலத்தில் பிறந்திருந்தாலும் ராக்ஷஸ க்ருத்யமில்லாததால் தர்மஸ்வபா வன் என்று சொல்லும்படியான ஸ்ரீவிபீஷணாழ்வான் விலக்கப்படு கிறார். அன்றிக்கே ப்ராணன்களை அபஹரியாநின்ற ராக்ஷஸர்களு டைய வதத்தைப்பண்ணுவிக்கைக்கு (ப்ரார்த்திப்பதற்கு) அபிமுக மாக வந்தார்கள். ஶரணாகதியென்பது, ரக்ஷகனுடைய அபிமுக மாகச் செல்லுமதைக்காட்டிலும் வேறன்று. ஶத்ருக்களிடம் கார் யத்தைக்கொள்ள வேண்டுமென்கிற புருஷர்களுடைய முன்னிற் றலே போதுமானது.

34 ஸ தேஷாம் ப்ரதிஶுஶ்ராவ ராக்ஷஸாநாம் ததா வநே

ஸ தேஷாம் ப்ரதிஶுஶ்ராவ ராக்ஷஸாநாம் ததா வநே

[illegible]

அவ—முநிகளுடைய பரிதாபகரமான நிலைமையைப்பார்த்து விரோதி நிரஸநம் ப்ரதிஜ்ஞை பண்ணப்பட்டது.

அந்த ராமன் ராக்ஷஸர்களுக்கு வாஸஸ்தாநமான தண்டகா வநத்தில், அந்த ருஷிகளுக்கு, அவர்களால் எவ்வாறு வேண்டிக் கொள்ளப் பட்டதோ? அவ்வாறே ப்ரதிஜ்ஞை பண்ணினான்.

ப்ரதிஜ்ஞாதஶ்ச ராமேண வதஸ் ஸம்யதி ரக்ஷஸாம்
35 ருஷீணாமக்நிகல்பாநாம் தண்டகாரண்யவாஸிநாம்

ப்ரதிஜ்ஞாதஶ்ச ராமேண வதஸ் ஸம்யதி ரக்ஷஸாம்
ருஷீணாமக்நிகல்பாநாம் தண்டகாரண்ய வாஸிநாம்

[illegible] ராமேண ப்ரதிஜ்ஞாதஶ்ச [illegible] ப்ரதிஜ்ஞாதஶ்சேதி......................ராமேண ப்ரதி ஜ்ஞாதோ [illegible] "அக்நிகல்பாநாம்— [illegible]

[illegible]

அவ—ருஷிகளால் வேண்டிக்கொள்ளப் பட்டதும், ராமனால் ப்ரதிஜ்ஞை பண்ணப்பட்டதுமான பொருள் எது? என்கிற ஶங்கையிற் சொல்லுகிறார். ப்ரதிஜ்ஞாதஶ்ச என்று

இராமனால்ப்ரதிஜ்ஞை பண்ணப்பட்ட பொருளாவது, சிறிது அக்நியோடு ஸாம்யத்தை யடைந்தவர்களாய், (ஆகையாலேயே) தண்டகாரண்யத்தில் வஸியா நின்றவர்களான ருஷிகளின் பொருட்டு யுத்தத்தில் ராக்ஷஸர்களுடைய வதம் (ஆகும்.)

[illegible]
36 [illegible]

தேந தத்ரைவ வஸதா ஜநஸ்தாநநிவாஸிநீ
விரூபிதா ஶூர்பணகா ராக்ஷஸீ காமரூபிணீ

[illegible]

அவ—ப்ரதிஜ்ஞையை நிறைவேற்ற அடியிடுகிறார் தேநேதி.

அர்த்தம் - ஜநஸ்தாநத்தில் வஸியா நின்ற ராமனால், ஜநஸ்தாநத்தில் வஸியா நின்றவளாயும் நினைத்தபடி உருக்கொள்ள வல்லளாயு மிருக்கும் ஶூர்ப்பணகா என்கிற ராக்ஷஸீ, காதும்மூக்கும் அறுக்கப்பட்டதால், வைரூப்யத்தை அடைவிக்கப் பட்டாள். வைரூப்யம், லக்ஷ்மணனால் பண்ணுவிக்கப்பட்டாலும், லக்ஷ்மணனை ராமனுடைய வலது கையாகச் சொல்லுகையால், ராமனால் வைரூப்யத்தை அடைவிக்கப் பட்டாள் என்று சொல்லப் பட்டது.

𑌤𑌤𑌃 𑌶𑍂𑌰𑍍𑌪𑌣𑌖𑌾𑌵𑌾𑌕𑍍𑌯𑌾𑌦𑍁𑌦𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌨𑍍𑌸𑌰𑍍𑌵𑌰𑌾𑌕𑍍𑌷𑌸𑌾𑌨𑍍
37 𑌖𑌰𑌂 𑌤𑍍𑌰𑌿𑌶𑌿𑌰𑌸𑌂𑌚𑍈𑌵 𑌦𑍂𑌷𑌣𑌂𑌚𑍈𑌵 𑌰𑌾𑌕𑍍𑌷𑌸𑌂
𑌨𑌿𑌜𑌘𑌾𑌨 𑌰𑌣𑍇 𑌰𑌾𑌮𑌃 𑌤𑍇𑌷𑌾𑌂𑌚𑍈𑌵 𑌪𑌦𑌾𑌨𑍁𑌗𑌾𑌨𑍍

ததஶ் ஶூர்பணகாவாக்யாத் உத்யுக்தாந் ஸர்வராக்ஷஸாந்
கரம் த்ரிஶிரஸம் சைவ தூஷணம் சைவ ராக்ஷஸாந்
நிஜகாந ரணே ராம: தேஷாம் சைவ பதாநுகாந்

𑌤𑌤𑌃-𑌶𑍂𑌰𑍍𑌪𑌣𑌖𑌾 𑌵𑍈𑌰𑍂𑌪𑍍𑌯 𑌕𑌰𑌣𑌾𑌨𑌨𑍍𑌤𑌰𑌂 𑌶𑍂𑌰𑍍𑌪𑌣𑌖𑌾𑌵𑌾𑌕𑍍𑌯𑌾𑌤𑍍,𑌉𑌦𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌨𑍍-(𑌯𑍁𑌦𑍍𑌧𑌾𑌯) 𑌸𑌨𑍍𑌨𑌦𑍍𑌧𑌾𑌨𑍍, 𑌸𑌰𑍍𑌵𑌰𑌾𑌕𑍍𑌷𑌸𑌾𑌨𑍍-𑌚𑌤𑍁𑌰𑍍𑌦𑌶 𑌸𑌂𑌖𑍍𑌯𑌾𑌕 𑌪𑍍𑌰𑌧𑌾𑌨 𑌰𑌾𑌕𑍍𑌷𑌸𑌾𑌨𑍍 𑌤𑍇𑌷𑍍𑌵𑌪𑌿 𑌪𑍍𑌰𑌧𑌾𑌨𑌂, 𑌖𑌰𑌂 𑌤𑍍𑌰𑌿𑌶𑌿𑌰𑌸𑌂 𑌦𑍂𑌷𑌣𑌂𑌚𑍈𑌵 𑌰𑌾𑌕𑍍𑌷𑌸𑌂 𑌤𑍇𑌷𑌾𑌂-𑌚𑌤𑍁𑌰𑍍𑌦𑌶 𑌰𑌾𑌕𑍍𑌷𑌸𑌾𑌨𑌾𑌂 𑌖𑌰𑌾𑌦𑍀𑌨𑌾𑌂𑌚 𑌪𑌦𑌾𑌨𑍁𑌗𑌾𑌨𑍍-𑌅𑌨𑍁𑌚𑌰𑌾𑌂𑌶𑍍𑌚, 𑌰𑌣𑍇-𑌯𑍁𑌦𑍍𑌧𑍇, 𑌨𑌿𑌜𑌘𑌾𑌨-𑌹𑌤𑌵𑌾𑌨𑍍. 𑌯𑌦𑍍𑌵𑌾, 𑌖𑌰𑌾𑌦𑍀𑌨𑍍 𑌤𑍇𑌷𑌾𑌂 𑌪𑌦𑌾𑌨𑍁𑌗𑌾𑌨𑍍 𑌸𑌰𑍍𑌵𑌰𑌾𑌕𑍍𑌷𑌸𑌾𑌂𑌶𑍍𑌚 𑌨𑌿𑌜𑌘𑌾𑌨 𑌇𑌤𑌿 𑌯𑍋𑌜𑌨𑌾.

அர்-ஶூர்ப்பணகையின் வைரூப்யத்தைச் செய்தபின், ஶூர்பப்ணகையின் வார்த்தையினால் யுத்தத்திற்கு ஸந்நத்தர்களாய் வரா நின்ற பதினாலாயிரம் ராக்ஷஸர்களையும், அவர்களில் ப்ரதாநர்களான கர, தூஷண, த்ரிஶிரர்களையும், இவர்களெல்லாருக்கும் அநுசரர்களானவர்களையும் யுத்தத்தில் கொன்றான். அன்றிக்கே, கரன் முதலானவர்களையும் அவர்களின் அநுசரர்களான அகில ராக்ஷஸர்களையும் கொன்றான் என்றும் யோசிக்கலாம்.

38 𑌵𑌨𑍇 𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌨𑌿𑌵𑌸𑌤𑌾 𑌜𑌨𑌸𑍍𑌥𑌾𑌨𑌨𑌿𑌵𑌾𑌸𑌿𑌨𑌾𑌂
𑌰𑌕𑍍𑌷𑌸𑌾𑌂 𑌨𑌿𑌹𑌤𑌾𑌨𑍍𑌯𑌾𑌸𑌨𑍍 𑌸𑌹𑌸𑍍𑌰𑌾𑌣𑌿 𑌚𑌤𑍁𑌰𑍍𑌦𑌶

வநே தஸ்மிந் நிவஸதா ஜநஸ்தாந நிவாஸி நாம்
ரக்ஷஸாம் நிஹதாந்யாஸந் ஸஹஸ்ராணி சதுர்தஶ

𑌖𑌰-𑌹𑌤𑌾𑌨𑍍 𑌰𑌾𑌕𑍍𑌷𑌸𑌾𑌨𑍍 𑌪𑌰𑌿𑌸𑌂𑌚𑌷𑍍𑌟𑍇 𑌵𑌨 𑌇𑌤𑌿. 𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌵𑌨𑍇 𑌨𑌿𑌵𑌸𑌤𑌾 𑌰𑌾𑌮𑍇𑌣, 𑌜𑌨𑌸𑍍𑌥𑌾𑌨 𑌨𑌿𑌵𑌾𑌸𑌿𑌨𑌾𑌂 𑌰𑌕𑍍𑌷𑌸𑌾𑌂 𑌚𑌤𑍁𑌰𑍍𑌦𑌶 𑌸𑌹𑌸𑍍𑌰𑌾𑌣𑌿, 𑌨𑌿𑌹𑌤𑌾𑌨𑌿 𑌆𑌸𑌨𑍍, 𑌵𑌨𑍇 𑌵𑌸𑌤𑌾 𑌰𑌾𑌮𑍇𑌣, 𑌇𑌤𑍍𑌯𑌨𑍇𑌨 𑌨𑌿𑌸𑍍𑌸𑌹𑌾𑌯𑌤𑍍𑌵𑌂𑌚, 𑌜𑌨𑌸𑍍𑌥𑌾𑌨 𑌨𑌿𑌵𑌾𑌸𑌿𑌨𑌾𑌂 𑌰𑌾𑌕𑍍𑌷𑌸𑌾𑌨𑌾𑌂 𑌇𑌤𑍍𑌯𑌨𑍇𑌨 𑌅𑌰𑌣𑍍𑌯𑌵𑌰𑍍𑌤𑌿𑌤𑍍𑌵𑍇𑌨 𑌅𑌤𑌿𑌘𑍋𑌰𑌤𑍍𑌵𑌂𑌚 𑌸𑌹𑌸𑍍𑌰𑌾𑌣𑍀𑌤𑍍𑌯𑌨𑍇𑌨 𑌅𑌸𑌂𑌖𑍍𑌯𑍇𑌯𑌤𑍍𑌵𑌂𑌚 𑌦𑌰𑍍𑌶𑌿𑌤𑌂.

அவ—(ராமனால் கொல்லப்பட்ட ராக்ஷஸர்களை கணக்கிடுகிறார். வரே-என்று.

அர் - அந்த வநத்தில் வஸியா நின்ற ராமனாலே, ஜநஸ்தாநத்தில் வஸியா நின்ற ராக்ஷஸர்களுடைய பதினாலாயிரமும் (ராக்ஷஸர்கள் பதினாலாயிரவர்களும்) கொல்லப் பட்டவர்களாக ஆனார்கள்.

வநத்தில் வஸியா நின்ற ராமனாலே என்றதால், ராமனுக்கு வநம் தன்னிலமன்றென்பதும், பார்த்தவர்கள் மனதிலுண்டான சோகத்தை நீக்கி ஆநந்தத்தை யுண்டுபண்ணக்கூடிய ரமணீயமான திருவுருவை யுடைத்தா யிருக்கும் தன்மையும், ஏகவசநத்தால் நிஸ்ஸஹாயத்வமும் சொல்லப்பட்டன. ஜநஸ்தாநத்தில் வஸியா நின்ற என்றதால், அரண்யம் ராக்ஷஸர்களுக்குத் தன்னில மாயிருக்கும் தன்மையும், ராக்ஷஸர்கள் என்றதால் பார்த்தவர்கள் மனது பதறும் படியான பயங்கரமான ரூபத்தை யுடையவர்கள் என்பதும், பதினாலாயிரம், என்றதால் ராக்ஷஸர்களின் அளவு கடந்த எண்ணிக்கையும் குறிக்கொள்ளத்தக்கன.

39 𑌤𑌤𑍋 𑌜𑍍𑌞𑌾𑌤𑌿𑌵𑌧𑌂 𑌶𑍍𑌰𑍁𑌤𑍍𑌵𑌾 𑌰𑌾𑌵𑌣𑌃 𑌕𑍍𑌰𑍋𑌧𑌮𑍂𑌰𑍍𑌛𑌿𑌤𑌃
𑌸𑌹𑌾𑌯𑌂 𑌵𑌰𑌯𑌾𑌮𑌾𑌸 𑌮𑌾𑌰𑍀𑌚𑌂 𑌨𑌾𑌮 𑌰𑌾𑌕𑍍𑌷𑌸𑌂

**ததோஜ்ஞாதிவதம் ஶ்ருத்வா ராவண: க்ரோத மூர்சித:**
**ஸஹாயம் வரயாமாஸ மாரீசம் நாம ராக்ஷஸம்**

𑌅𑌵-𑌏𑌵𑌂 𑌰𑌾𑌮𑌸𑍍𑌯 𑌸𑌤𑍍𑌯𑌪𑍍𑌰𑌤𑌿𑌜𑍍𑌞𑌤𑍍𑌵𑍇 𑌉𑌕𑍍𑌤𑍇 𑌸𑍀𑌤𑌾𑌯𑌾𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑌕𑌾𑌰𑌤𑍍𑌵𑌂 𑌵𑌕𑍍𑌤𑍁𑌂 𑌉𑌪𑌕𑍍𑌷𑌿𑌪𑌤𑌿 𑌤𑌤 𑌇𑌤𑌿.

𑌤𑌤𑌃-𑌖𑌰𑌾𑌦𑌿𑌵𑌧𑌾𑌨𑌨𑍍𑌤𑌰𑌂 𑌜𑍍𑌞𑌾𑌤𑌿𑌵𑌧𑌂 𑌶𑍍𑌰𑍁𑌤𑍍𑌵𑌾-𑌜𑍍𑌞𑌾𑌤𑌿𑌹𑌨𑌨𑌵𑌾𑌰𑍍𑌤𑌾𑌂 (𑌅𑌕𑌂𑌪𑌨𑌶𑍂𑌰𑍍𑌪𑌣𑌖𑌾𑌮𑍁𑌖𑍇𑌨) 𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌰𑌾𑌵𑌣𑌃 𑌰𑍌𑌤𑌿-𑌰𑌾𑌵𑌯𑌤𑌿, 𑌇𑌤𑌿 𑌰𑌾𑌵𑌣𑌃 𑌯𑌦𑍍𑌵𑌾, 𑌵𑌿𑌶𑍍𑌰𑌵𑌣𑌃 𑌰𑌵𑌣𑌃 𑌤𑌸𑍍𑌯 𑌅𑌪𑌤𑍍𑌯𑌂 𑌪𑍁𑌮𑌾𑌨𑍍 𑌰𑌾𑌵𑌣𑌃, 𑌕𑍍𑌰𑍋𑌧𑌮𑍂𑌰𑍍𑌛𑌿𑌤𑌃 𑌕𑍍𑌰𑍋𑌧𑍇𑌨 𑌕𑍋𑌪𑍇𑌨 𑌮𑍂𑌰𑍍𑌛𑌿𑌤𑌃-𑌮𑍂𑌢𑌃, 𑌮𑌾𑌰𑍀𑌚𑌂 𑌨𑌾𑌮-𑌮𑌾𑌰𑍀𑌚𑌾𑌖𑍍𑌯𑌂 𑌰𑌾𑌕𑍍𑌷𑌸𑌂, 𑌸𑌹𑌾𑌯𑌂 𑌵𑌰𑌯𑌾𑌮𑌾𑌸.

அவ—இந்த ப்ரகாரம் ராமனுடைய ஸத்ய ப்ரதிஜ்ஞத்வம் சொல்லப் பட்டதும், ஸீதையின் புருஷாகார த்வத்தைச் சொல்ல அடியிடுகிறார். ததஇதி

*அர்—கரன் முதலான ராக்ஷஸர்களுடைய வதத்தின் பிறகு, தனக்கு ஜ்ஞாதியான கரனுடையவதத்தை (அகம்பனன் சூர்ப்பணகையாகிய இருவர்களின் வார்த்தையால் தெரிந்து கொண்டு, ராவணன், உலகத்தை அழப்பண்ணுகையாலே அல்லது ரவணன் எனப்படுகிற விஶ்ரவஸ்ஸுவின் புத்ரனுகையாலே: ராவணன் எனப்படுவான், கோபத்தால் (யுக்தா யுக்த மறியாத) மூடனுய், மாரீசன் என்கிற பெயரையுடைய ராக்ஷஸனை, (ஸீதையை அபஹரித்துக் கொண்டு வருவதற்கு) ஸஹாயமாக யிருக்கும்படி வேண்டிக் கொண்டான்.*

40 𑌵𑌾𑌰𑍍𑌯𑌮𑌾𑌣𑌸𑍍𑌸𑍁𑌬𑌹𑍁𑌶𑍋 𑌮𑌾𑌰𑍀𑌚𑍇𑌨 𑌸 𑌰𑌾𑌵𑌣𑌃
𑌨 𑌵𑌿𑌰𑍋𑌧𑍋 𑌬𑌲𑌵𑌤𑌾 𑌕𑍍𑌷𑌮𑍋 𑌰𑌾𑌵𑌣 𑌤𑍇𑌨 𑌤𑍇

வார்யமாணஸ் ஸுபஹுஶோ மாரீசேந ஸ ராவண:
நவிரோதோ பலவதா க்ஷமோ ராவண தேந தே

𑌵𑌾𑌰𑍍𑌯𑌮𑌾𑌣 𑌇𑌤𑌿 𑌅𑌤𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑍇 𑌸 𑌰𑌾𑌵𑌣𑌃, 𑌹𑍇 𑌰𑌾𑌵𑌣! 𑌤𑍇-𑌤𑌵, 𑌬𑌲𑌵𑌤𑌾 𑌖𑌰𑌾𑌦𑌿 𑌚𑌤𑍁𑌰𑍍𑌦𑌶 𑌰𑌾𑌕𑍍𑌷𑌸𑌵𑌧𑍇𑌨 𑌦𑍃𑌷𑍍𑌟𑌾𑌵𑌦𑌾𑌨𑌵𑌤𑌾 𑌬𑌲𑍀𑌯𑌸𑌾 𑌤𑍇𑌨 𑌰𑌾𑌮𑍇𑌣, 𑌵𑌿𑌰𑍋𑌧𑌃 𑌨 𑌕𑍍𑌷𑌮𑌃-𑌨 𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌇𑌤𑌿, 𑌮𑌾𑌰𑍀𑌚𑍇𑌨 𑌸𑍁𑌬𑌹𑍁𑌶𑌃-𑌬𑌹𑍁𑌬𑌹𑍁 𑌵𑌾𑌰𑍍𑌯𑌮𑌾𑌣𑌃 (40)

*அர்—(இதன் கடைசியில்) அந்த ராவணன், "ஹேராவணு! உனக்கு, கரன் முதலான பதினுலாயிரம் ராக்ஷஸர்களுடைய வதத்திஞல் அறியப்பட்ட வ்ருத்தாந்தத்தை யுடைய பலவானுனை அந்த ராமனேடு விரோதம் யுக்தமன்று" என்று அடிக்கடி தடுக்கப்பட்டவனுக (ஆனுன்.)*

41 𑌅𑌨𑌾𑌦𑍃𑌤𑍍𑌯 𑌤𑍁 𑌤𑌦𑍍𑌵𑌾𑌕𑍍𑌯𑌂 𑌰𑌾𑌵𑌣𑌃 𑌕𑌾𑌲𑌚𑍋𑌦𑌿𑌤𑌃
𑌜𑌗𑌾𑌮 𑌸𑌹𑌮𑌾𑌰𑍀𑌚𑌃 𑌤𑌸𑍍𑌯𑌾𑌶𑍍𑌰𑌮𑌪𑌦𑌂 𑌤𑌦𑌾

அநாத்ருத்யது தத்வாக்யம் ராவண: காலசோதித:
ஜகாம ஸஹமாரீச: தஸ்யாஶ்ரமபதம் ததா

𑌰𑌾𑌵𑌣𑌃, 𑌕𑌾𑌲𑌚𑍋𑌦𑌿𑌤𑌃-𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌨𑌾 𑌪𑍍𑌰𑍇𑌰𑌿𑌤𑌸𑍍𑌸𑌨𑍍 𑌤𑌦𑍍𑌵𑌾𑌕𑍍𑌯𑌂-𑌮𑌾𑌰𑍀𑌚𑌵𑌾𑌕𑍍𑌯𑌂 𑌅𑌨𑌾𑌦𑍃𑌤𑍍𑌯-𑌸𑌹 𑌮𑌾𑌰𑍀𑌚𑌃-𑌮𑌾𑌰𑍀𑌚 𑌸𑌹𑌿𑌤𑌃 𑌤𑌦𑌾-𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌨𑍇𑌵 𑌕𑌾𑌲𑍇 𑌤𑌸𑍍𑌯-[illegible] 𑌪𑍍𑌰𑌸𑌿𑌦𑍍𑌧𑌸𑍍𑌯𑌾𑌰𑌾𑌮𑌸𑍍𑌯 𑌆𑌶𑍍𑌰𑌮𑌪𑌦𑌂-𑌆𑌶𑍍𑌰𑌮𑌸𑍍𑌥𑌾𑌨𑌂 𑌜𑌗𑌾𑌮-𑌪𑍍𑌰𑌾𑌪,

श्रीरस्तु ॥

श्रीमते हयग्रीवाय नमः

श्रीमते रामानुजाय नमः ।

श्रीमते निगमान्तगुरवे नमः ।



---

श्रीमन्निगमान्तमहादेशिकैरनुगृहीता

# गोदास्तुतिः ।

[श्रीकाञ्ची-प्रतिवादि भयङ्कर-अण्णङ्गराचार्यकृत-
भावार्थबोधिनी टीका समेता । ]

ஸ்ரீமந்நிகமாந்த தேசிகன் அருளிச்செய்த

# கோதாஸ்துதி.

---

[ஸ்ரீகாஞ்சீ. ப்ர. அண்ணங்கராசாரியர் எழுதிய
வியாக்கியானத்தோடு கூடியது.]

श्रीमान् वेङ्कटनाथार्यः कवितार्किककेसरी ।
वेदान्ताचार्यवर्यो मे सन्निधत्तां सदा हृदि ॥

ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய: கவிதார்க்கிககேஸரீ.
வேதாந்தாசார்யவர்யோ மே ஸந்நிதத்தாம் ஸதா ஹ்ருதி.

---

श्रीविष्णुचित्तकुलनन्दनकल्पवल्लीं श्रीरङ्गराजहरिचन्दनयोगदृश्याम् ।
साक्षात् क्षमां करुणया कमलामिवान्यां गोदामनन्यशरणः शरणं प्रपद्ये ॥ १ ॥

ஸ்ரீவிஷ்ணுசித்தகுலநந்தந கல்பவல்லீம்
ஸ்ரீரங்கராஜஹரிசந்தநயோகத்ருஶ்யாம்.
ஸாக்ஷாத்க்ஷமாம் கருணயா கமலாமிவாந்யாம்
கோதாமநந்யஶரண: ஶரணம் ப்ரபத்யே.

## வியாக்கியான அவதாரிகை.

கவிதார்க்கிகஸிம்ஹ மென்னும் விருதுபடைத்த ஸ்ரீமந்நிகமாந்த தேசிகன் அந்த விருதை ஸார்த்தக மாக்குதற்குப் பற்பல திவ்ய க்ரந்தங்களை இயற்றியருளினார். அத்தகைய திவ்யக்ரந்தங்களின் பாகுபாடுகளில் ஸ்தோத்ரங்கள் என்பது ஒரு பாகுபாடு.

அநேக சாஸ்த்ர க்ரந்தங்களில் பலகால் பரிச்ரமப்பட்டு மிகவருந்தித் தெரிந்துகொள்ள வேண்டிய வேதாந்த ஸம்ப்ரதாயார்த்த ஸாரங்களை நம்போன்ற அலஸர்களான அல்பமதிகளும் எளிதில் உணர்ந்து உய்யும் வண்ணம் பலபல ஸ்தோத்ர க்ரந்தங்களை அமுதினுமாற்ற வினிதாக அவதரிப்பித்தருளினர். இவற்றை அர்த்தத்துடன் நன்கு அதிகரித்துக் கண்டபாடமாக தரிக்கப் பெறில் ஸர்வஜ்ஞத்வம் ஸித்தமாகுமென்பது அதிஶயோக்தியன்று.

ஸ்வாமிதாமே தசாவதார ஸ்தோத்திரத்தில் ஃபலச்ருதி அருளிச் செய்யுமிடத்து "வகுூ ரகுவலு ஸாரவஷீ வஹுஊவ ஹகூஃ வாரா உாநவெ மாஜிஃ காவி தவெநா கிமாவஊ உமவஊ வ்ாகிஞுஹா ஜூஃஹஷெ" என்று ஒரு சிறிய ஸ்தோத்ரத்தைக் கற்க நினைக்குமளவிலேயே பஹுமுக பாண்டித்யமும் பக்தியும் தூய்மையும் புகழுமாகிய இவையெல்லாம் ஒருங்கே விளையுமென்றார். உண்மையில் ஒவ்வொரு ஸ்தோத்ரமும் இத்தனை பெருமை வாய்ந்த தென்னுமிடத்தில் ஸம்ஶயலேஶமுமில்லை.

அந்த திவ்யஸ்தோத்ரங்களின் அரும் பெரும் பொருள்களை அனைவரும் அழகாக அறிந்து கொள்ளுமாறு அநதிஸம்க்ஷிப்த விஸ்த்ருதமான வியாக்கியானத்தை யெழுத மஹான்களின் நியமனத்தினால் ப்ரவர்த்திக்கும் பாக்கியம் பெற்ற அடியேன் இப்போது, சூடிக்கொடுத்த சுடர்க்கொடி விஷயமாக ஸ்வாமி அருளிய **கோதாஸ்துதியை** வியாக்கியானிக்கப் புகுகின்றேன். ஸ்வாமி தக்ஷிண திவ்யதேச யாத்திரையாக எழுந்தருளுமடைவில் ஸ்ரீவில்லிபுத்தூர்க்கு எழுந்தருளியிருக்கையில் அங்கு ஆண்டாள் விஷயத்திலுண்டான பக்தி பரீவாஹரூபமாக அருளிச்செய்தது இந்தஸ்துதி—என்று பெரியோர் கூறுவர்.

முதல் ஶ்லோகம்

**(அந்வயக்ரமம்.) ஸ்ரீவிஷ்ணு சித்தகுல நந்தந கல்பவல்லீம்' ஸ்ரீரங்கராஜ ஹரிசந்தநயோகத்ருச்யாம், ஸாக்ஷாத் க்ஷமாம், கருணயா அந்யாம் கமலாம் இவ (ஸ்திதாம்) கோதாம், அநந்யஶரண: (அஹம்) சரணம் ப்ரபத்யே.**

(உரை.) பெரியாழ்வாருடைய திருவம்ஶமாகிற நந்தன வனத்தில் தோன்றிய கற்பகக்கொடிபோன்றவளும், அழகிய மணவாளனாகிற கற்பகத்தருவோட்டைச் சேர்த்தியினால் அழகுபெற்று

விளங்குபவளும், க்ஷமைதானே வடிவெடுத்து வந்தவளென்னலாம் படி யுள்ளவளும், திருவருளினால் பெரிய பிராட்டியாருடைய அப ராவதார மென்னலாம்படி யுள்ளவளுமான சூடிக்கொடுத்த நாச்சி யாரைப் புகலொன்றில்லா வடியேன் சரண்புகுகின்றேனென்கை.

(விசேஷவுரை) ஸ்ரீகுணரத்ந கோஶத்தில் ஸ்ரீரங்கநாச்சியா ரைத் துதிக்கப்புகுந்த பட்டர் *அநுகல்தநுகாண்ட* இத்யாதியான மூன்றாவது ச்லோகத்தில் ஸ்ரீமஹாலக்ஷ்மியை ஒரு கற்பகக் கொடி யாகவருணித்துப் பேசினகணக்கிலே இவ்வாசிரியர் தாமும் ஆண் டாளைக் கற்பகக் கொடியாக முதலடியிலேயே பேசப்புகுந்தார். கற் பகக் கொடியானது ஸகலார்த்தங்களையும் அளிக்கவல்லது: அது போலவே ஆண்டாளும் தனது திவ்யஸூக்திகள் வழியாக ஸக லார்த்தங்களையும் விளங்கச் செய்பவள் என்பது விவக்ஷிதம். தேவேந்திரனுடைய உத்யான வனத்திற்கு நந்தன மென்று பெயர். அங்குத்தான் கற்பகக் கொடி படரும். இவ்வாண்டாளாகிற கற் பகக் கொடியானது * வேயர் தங்கள் குலத்துதித்த விட்டு சித்தன் குடியாகிற நந்தன வனத்தில் தோன்றியதாம். பெரியாழ்வா ருடைய திருக்குலம் ஆண்டாள் திருவவதாரத்தினால் மிக்க பொலிவு பெற்றதென்பது கருத்து.

கொடியானது ஒரு கொள்கொம்போடே அணைந்தல்லது நில் லாது. அது போல, இக்கோதைக் கொடியும் ஸ்ரீரங்கநாதனாகிற கற்பகத்தருவை யணைந்து விளங்கா நிற்கும். "எனக்கே தன்னைத் தந்த கற்பகம்" என்று ஆழ்வார் எம்பெருமானைக் கல்பவ்ருக்ஷ மாக அருளிச் செய்திருப்பது காண்க. அமர கோஶத்தில் "**पञ्चैते देवतरवोमन्दारः पारिजातकः। संतानः कल्पवृक्षश्च पुंसि वा हरिचन्दनम्॥**" பஞ்சைதே தேவதரவோ மந்தார:, பாரிஜாதக:-ஸந்தாந: கல்பவ் ருக்ஷஶ்ச பும்ஸிவா ஹரிசந்தநம்" என்று ஐந்து வ்ருக்ஷங்கள் தேவ வ்ருக்ஷங்களாகக் கூறப்பட்டன; அவற்றுள் ஏதேனு மொன்றைச் சொன்னாலும் ஐந்தும் சொன்னபடி யாகுமென்பது கவிமரபு, **श्रीरङ्गराज एव हरिचन्दनः—कल्पवृक्षः, तेन सह योगेन—नित्यसंयोगेन दृश्याम्- -रमणीयामित्यर्थः॥** ஸ்ரீரங்கராஜ ஏவ ஹரிசந்தந:- கல்பவ் ருக்ஷ:, தேநஸஹயோகேந—நித்யஸம்யோகேந த்ருஶ்யாம்—ரமணீ யாமித்யர்த்த:. மானிடவர்க் கென்று பேச்சுப்படில் வாழகில்லேன் என்று உறுதி கொண்டபடியே எம்பெருமானையே கணவனைப் பெற்று மகிழ்ந்தவ ளென்றவாறு.

ஸாக்ஷாத் க்ஷமாம் என்றது இரட்டுற மொழிதல் போலும். (அதாவது) க்ஷமா என்ற பதம் பூமிக்கும் வாசகம், பொறுமைக் குணத்திற்கும் வாசகம். அவ்விரண்டு பொருளும் இங்கு விவக்ஷிதமேயாகும். ஆண்டாள் யோநிஜை யன்றிக்கே ஸீதாபிராட்டி போலே நிலத்தில் தோன்றியவளாதலால் பூமிப் பிராட்டியின் அம்ஶாவதாரமாகச் சொல்லப்படுவள். அதனாலே பூமியென்ற பொருள் விவக்ஷிதம். ஸர்வம்ஸஹையான அந்த பூமியின் குணமான பொறுமை, இவளுக்கு பகவத் பத்நீத்வ ப்ரயுக்த புருஷகாரத்வைகாந்திக மாதலால் அப்பொருளும் இங்கு விவக்ஷிதம்.

[கருணயா அங்யாம் கமலாமிவ ஸ்திதாம்.] அந்த க்ஷமாகுணத்திற்கும் ஊற்றுவாயான கருணை, ஆண்டாள் பக்கலிலே குடிகொண்டிருக்கும் படியை நோக்குங்கால் "देव्या कारुण्यरूपया" [தேவ்யா காருண்ய ரூபயா] என்னப் பட்ட பெரிய பிராட்டியார் தாமே இப்படியும் ஒரு திருவுருக் கொண்டாள் கொலோ! என்னலாம் படியிருக்குமென்கை. * அல்லி நாள் தாமரை மேலாரணங்கினின் துணைவியிறே!. ஆக இப்படிப் பட்ட ஆண்டாளை யடிபணிகின்றேனென்றாராயிற்று.

இது முதல் இருபத்தேழு ச்லோகங்கள் வஸந்ததிலக வ்ருத்தத்தில் அமைந்தவை. " उक्तं वसन्ततिलकं तभजा जगौ गः " [உக்தம் வஸந்ததிலகம் தபஜா ஜகௌக:] என்பது அதன் இலக்கணம்.(க)

**वैदेशिकः श्रुतिगिरामपि भूयसीनां वर्णेषु माति महिमा न हि मादृशां ते ।**
**इत्थं विदन्तमपि मां सहसैव गोदे मौनद्रुहो मुखरयन्ति गुणास्त्वदीयाः ॥ २ ॥**

வைதேஶிக: ஶ்ருதிகிராமபி பூயஸீநாம்
வர்ணேஷு மாதி மஹிமா நஹி மாத்ருஶாம் தே
இத்தம் விதந்தமபி மாம் ஸஹஸைவ கோதே
மௌநத்ருஹோ முகரயந்தி குணா: த்வதீயா:

(அந்.) கோதே! பூயஸீநாம் ச்ருதிகிராமபி வைதேசிக: தே! மஹிமா மாத்ருசாம் வர்ணேஷு நஹிமாதி; இத்தம் விதந்தம் அபி மாம் த்வதீயா: குண: மௌநத்ருஹஸ்ஸந்த: ஸஹஸைவ முகரயந்தி.

(உரை.) ஆண்டாளே! பலபல வேதவாக்குக்களுக்கும் எட்டாததான உம்முடைய வைபவமானது என்போன்றவர்களின் (அற்பங்களான) அக்ஷரங்களில் அடங்கமாட்டாது என்கிறவிதனை நான் அறிந்திருக்கச் செய்தேயும் உம்முடைய திருக்கல்யாண

குணங்களானவை என்னை வாய்மூடி நிற்கவொட்டாமல் பலாத்கார மாகவே பேசுவிக்கின்றன வென்கை.

எம்பெருமானுடைய மஹிமை, எப்படி வேதங்களினுலும் எல்லைகாண முடியாததோ! அப்படியே பிராட்டியின் மஹிமையும் வேதங்களாலும் அபரிச்சேத்யம் என்பது ஸர்வஸம்மதம். ஆண்டாள் பிராட்டியின் அம்ஶமென்பதும் ஸர்வஸம்மதம். ஆகவே, 'வேதங்களாலும் அறுதியிட வொண்ணுத உன்மஹிமையை அல்பஜ்ஞனை அடியேன் பேசப்புகுவது மிகவும் பேதைமை' என்று அநுஸந்திக்க ப்ராப்தமாயிற்று. அங்ஙனம் அநுஸந்தித்த ஆசிரியர் 'அடியேன் இந்த ஸ்துதியை விண்ணப்பம் செய்யப்புகுவது விஞ்ஞை காரியம் போலிருக்கின்றதே!' என்பதைப் பூர்வார்த்தத்திஞல் வெளியிட்டு, தாமே ஸமாஹிதராய் ஸ்துதியில் ப்ரவர்த்திக்கிறபடியை உத்தரார்த்தத்திஞல் வெளியிடுகிருர். ஆண்டாளே! உனது திருக்குணங்களை யெல்லாம் பேசவேணுமென்கிற ஆவலோடு நான் ப்ரவர்த்திக்கின்றிலேன்; உனது திருக்குணங்கள் ஊமையையும் பேசுவிக்கவல்லவை யாதலால், ஸ்வேச்சயாஸ்துதியில் ப்ரவர்த்திக்க நினைவில்லாத அடியேனையும் பலாத்காரமாகவே தூண்டுகின்றனவாதலால் பரவசஞய் ப்ரவர்த்திக் கின்றேனத்தனை என்ருராயிற்று.

ச்ருதிகிராமபி அவிஷய: என்ன வேண்டுவதற்குப் பர்யாயமாக, வைதேசிக: என்றது, கம்பீர ப்ரயோகமிருக்கிறபடி. **वैदेशिकः—विभिन्नदेशवर्ती.** [வைதேஶிக:—விபிந்நதேஶ வர்த்தீ.] என்றபடி. "நான்மறைகள் தேடியென்றுங் காணமாட்டாச் செல்வன்" என்றது போலே.

**अत्यन्तं बह्वयः—भूयस्यः, तासाम्-भूयसीनाम्।** [அத்யந்தம் பஹ்வ்ய:—பூயஸ்ய: தாஸாம் பூயஸீநாம்] வர்ணேஷு என்பதற்கு ஸ்துதிகளில் எனப் பொருள் கூறுதலும் பொருந்தும் * **वर्णो द्विजादौ शुक्लादौ स्तुतौ वर्णं तु वाऽक्षरे इत्यमरः॥ मौन-द्रुहः**— நான் வாய் திறவாதிருக்கும்படி பார்த்திருக்கமாட்டாதவை என்றபடி. (2.)

**त्वत्प्रेयसः श्रवणयोरमृतायमानां तुल्यां त्वदीयमणिनूपुरशिञ्जितानाम्।**
**गोदे! त्वमेव जननि! त्वदभिष्टवार्हां वाचं प्रसन्नमधुरां मम संविधेहि॥ ३॥**

த்வத்ப்ரேயஸ: ஶ்ரவணயோ ரம்ருதாயமாநாம்
துல்யாம் த்வதீயமணி நூபுரஶிஞ்ஜிதாநாம்

கோதே த்வமேவ ஜநநி த்வதபிஷ்ட வார்ஹாம்
வாசம் ப்ரஸந்நமதுராம் மம ஸம்விதேஹி

(அந்.) ஹே ஜநநி கோதே த்வத் ப்ரேயஸ ச்ரவணயோ: அம்ருதாயமாநாம், த்வதீயமணிநூபுர சிஞ்ஜிதாநாம் துல்யாம் த்வத் அபிஷ்டவ அர்ஹாம் ப்ரஸந்நமதுராம் வாசம் த்வமேவ மம ஸம்விதேஹி.

(உரை) தாயே கோதாய்! உன்னுடைய கொழுநனை எம்பெருமானுடைய திருச்செவிகளுக்கு அமுதம் போல் இனிதாயிருப்பதும், உனது ரத்நமயமான பாதச்சிலம்பின் அழகிய வொலிக்குத் தோள்தீண்டியாயிருப்பதும், உன்னைத் துதிப்பதற்கு ஏற்றிருப்பதும், ப்ரஸந்ந மதுரமுமான வாக்கை நீயே எனக்கு வாய்க்கும்படி அநுக்ரஹிக்க வேணுமென்கை.

இந்த ஸ்துதியானது ஆண்டாளுடைய திருவருளினாலேயே பரம மதுரமாக அமைகின்றதென்பதை இதனால் தெரிவிக்கிறார். பட்டர் ஸ்ரீகுண ரத்ந கோசத்தில் " श्रियः श्रीः श्रीरंगेशय तव च हृद्यां भगवतीं श्रियं त्वत्तोऽप्युच्चैर्वयमिह फणामः शृणुतराम्। दृशौ ते भूयास्तां सुखतरलतारे श्रवणतः पुनर्हर्षोत्कर्षात् स्फुटतु भुजयोः कञ्चुकशतम्।" [ச்ரிய: ஸ்ரீ: ஸ்ரீ ரங்கேசய தவசஹ்ருத்யாம் பகவதீம் ஸ்ரீயம் த்வத்தோப்யுச்சை: வயமிஹ பணாம: ச்ருணுதராம்-த்ருசௌதே பூயாஸ்தாம் ஸுகதரளதாரே ச்ரவணத: புநர்ஹர் ஷோத்கர்ஷாத் ஸ்புடது புஜயோ: கஞ்சுகசதம்] என்ற ச்லோகத்தினால் தெரிவித்தருளின அர்த்தத்தை இதில் முதல் பாதத்தினால் ஸ்வாமி தெரிவிக்கிறார். எம்பெருமானும் இந்த ஸ்துதியைக் கேட்டருளி மிகவும் திருவுள்ள முவப்பனென்றவாறு.

ஆண்டாள் சிலம்பார்க்க நடக்கப் புக்கால் அந்த ஆர்ப்பு எவ்வளவு போக்ய மாயிருக்குமோ அவ்வளவு போக்ய மாயிருக்கும் இந்த ஸ்துதியின் சப்த ஸந்நிவேசமும் என்பது இரண்டாம் பாதத்தின் உட்கருத்து.

[ப்ரஸந்ந மதுராம்.] விவக்ஷிதமான பொருளை வெகு ப்ரயாஸப் பட்டுத் தெரிந்து கொள்ள வேண்டாமல் எளிதாகவும் தெளிதாகவும் தெரிந்து கொள்ளுதற்குப் பாங்காக அமைந்திருத்தல் ப்ரஸந்நத்வ மாகும். நாரிகேள பாகமாக இருக்கை யன்றியே த்ராக்ஷாபாகமாக இருக்கை மாதுர்ய மாகும்............................(ங)

**कृष्णान्वयेन दधतीं यमुनानुभावं तीर्थैर्यथावदवगाह्य सरस्वतीं ते ।**
**गोदे विकस्वरधियां भवतीकटाक्षात् वाचस्स्फुरन्ति मकरन्दमुचः कवीनाम् ॥४॥**

க்ருஷ்ணாந்வயேந தததீம் யமுநாநுபாவம்
தீர்த்தைர்|யதாவதவகாஹ்ய ஸரஸ்வதீம் தே
கோதே விகஸ்வரதியாம் பவதீ கடாக்ஷாத்
வாசஸ் ஸ்புரந்தி மகரந்தமுசஃ கவீநாம்

(அந்)கோதே! க்ருஷ்ணாந்வயேந யமுநாநுபாவம் தததீம் தே ஸரஸ்வதீம் தீர்த்தைஃ யதாவத் அவகாஹ்ய பவதீகடாக்ஷாத் விகஸ்வரதியாம் கவீநாம் மகரந்தமுசஃ வாசஃ ஸ்புரந்தி.

(உரை) ஆண்டாளே! ஸ்ரீகிருஷ்ண ஸம்பந்தத்தினால் 'யமுனை தானோ இது?' என்னலாம் படியுள்ள உனது ஸரஸ்வதியை [திவ்யப்ரபந்தத்தை] ஸதாசார்யமுகமாக அதிகரித்து உனது கடாக்ஷத்தினால் புத்தி விகாஸம் பெறுகின்ற கவிகளுக்கு அம்ருத வர்ஷியான வாக்குக்கள் விளைகின்றனவென்கை.

கண்ணபிரானுடைய ஸ்வரூப ரூப குண விபூதிகளைப் பரக்கப் பேசியுள்ள திருப்பாவையையும் நாச்சியார் திருமொழியையும் திருவுள்ளம்பற்றி தேஸரஸ்வதீம் என்றார். ஸரஸ்வதீ என்கிற சொல், வாக்குக்கு வாசகமாயிருப்பது போலவே ஒரு நதீ விசேஷத்திற்கும் வாசகமாதலால் அந்த அர்த்தமும் இங்கு தந்த்ரேண விவக்ஷிதம். ஸரஸ்வதியாயிருக்கச் செய்தேயும் யமுனை போலவுமிராநின்றதென்று ஒரு சமத்காரம் காட்டுகிறார் முதல் பாதத்தில். அதாவது—இவர் தாமே யதிராஜஸப்ததியில் "**विगाहे यामुनं तीर्थं साधुबृन्दावनेस्थितम् । निरस्तजिह्मगस्पर्शो यत्र कृष्णः कृतादरः ॥**" விகாஹே யாமுநம் தீர்த்தம் ஸாது ப்ருந்தாவநே ஸ்திதம்-நிரஸ்த ஜிஹ்மகஸ்பர்ஶே யத்ரக்ருஷ்ணஃ க்ருதாதரஃ என்றருளிச் செய்தபடிக்கும், ஸ்ரீபாகவதாதி கதாப்ரஸித்தியின் படிக்கும் யமுனையானது க்ருஷ்ண ஸம்பந்தத்தைப் பெற்றிருப்பது. க்ருஷ்ண வர்ண ஸம்பந்தம் பெற்றிருப்பதென்பதும், சொல்தொடையில் தோன்றும் யமுநாதீர்த்தம் கருநிறமுடையதென்பவாதலால், ஆண்டாளுடைய ஸரஸ்வதிக்குண்டான க்ருஷ்ணாந்வயத்தை விவரிக்க வேணுமோ? பாசுரந்தோறும் க்ருஷ்ண குணாநுபவமேயிறே! உள்ளது. ஆக இப்படிப்பட்ட ஸரஸ்வதியை [தீர்த்தைஃ யதாவத்

அவகாஹ்ய] நதிகளில் இறங்குதற்குரிய துறைகளுக்கும் தீர்த்த மென்று பெயர்; ஆசாரியர்களுக்கும் தீர்த்த மென்று பெயர். இங்கு ஆண்டாளுடைய திருவாக்கை ஸரஸ்வதீ சப்தத்தினுல் கூறியுள்ள படிக்கிணங்க "தீர்த்தைঃ யதாவத் அவகாஹ்ய" என்கிற பதங்களை ப்ரயோகித்தது பரம ரஸமயம். மஹா நதியில் துறை தவறி இறங்கினுல் அபாயமே பலிக்கும். தகுந்த துறைகளில் இறங்கி அவகாஹித்தே பயன்பெற வேண்டும். அதுபோல, இவளுடைய திவ்ய ப்ரபந்தங்களிலும் ஸதாசார்ய முகமாக இழிந்தாலல்லது சிறந்த நற்பொருள்களைப் பெற முடியாதென்று காட்டினபடி. ஆண்டாளுடைய திவ்ய ஸூக்திகள் அதி கம்பீரமான அர்த்தரத்நங்கள் அமையப்பெற்றனவாதலால் அவற்றில் மேலெழ நோக்குவார் பயன்பெறுர்கள்; ஆழ்ந்து நோக்குவார்க்கே அரிய பெரிய பொருள்கள் கிடைக்குமென்பதை அவகாஹ்ய என்றதனுல் காட்டினர். இங்ஙனம் ஆண்டாளுடைய திவ்யஸூக்திகளில் ஆழங்கால் படுவார்க்கு அவளுடைய கடாக்ஷமே அடியாக நல்லபுத்தி கொழுந்துவிட்டோங்கிப் படருமென்றும், அன்னவர்களும், தேனினுமினிய செஞ்சொற்கவிகளை இயற்ற வல்லமை பெறுவர்களென்றும் உத்தரார்த்தத்தால் தெரிவித்தபடி. கோதா என்னும் சொல் கோதாவரீ நதிக்கும் பெயராக நிகண்டுகளிலுள்ளது ஆகவே இந்த ச்லோகத்தில் கோதவரீ, க்ருஷ்ணை, யமுனை, ஸரஸ்வதீ என்கிற புண்ய நதிகளைச் சேர்த்துக் கவிபாடிய இன்பமும் அநுபவிக்கவுரியது. ஸமாஸோக்தி யலங்காரத்தில் இதுவொரு பாகுபாடாக ஆலங்காரிகர்கள் நிர்வஹிக்கின்றனர். மேலே "ப்ராயேண தேவி!பவதீவ்யபதேச யோகாத்" என்கிற பன்னிரண்டாம் ச்லோகத்தில் "यस्यां समेत्य समयेषु चिरं निवासाद्भागीरथीप्रभृतयोपि भवन्ति पुण्याः" [யஸ்யாம் ஸமேத்ய ஸமயேஷு சிரம்நிவாஸாத் பாகீரதீ ப்ருப்ருதயோபி பவந்தி புண்யாঃ] என்று கோதாவரீ நதியைப்பற்றின ஒரு புராண வரலாற்றை யெடுத்துரைக்கிருர். க்ருஷ்ணு யமுநா ஸரஸ்வதீ காவேரீ இத்யாதி நதிகள் சில ஸமயவிசேஷங்களில் கோதாவரீ நதியில் வாஸம் பெற்றுப் புனிதங்களாகின்றனவென்கிற இதிஹாஸம் அங்குக் கூறப்படுகிறது. இந்த ச்லோகத்தில் அந்த நதிகள் கோதாவரியோடு சேர்ந்தனவாகச் சொல் தொடையில் காட்டியிருக்குமழகு வியக்கத்தக்கது.............................................................................(௪)

## ஒரு ஆச்சர்யமான அலாரம் டைம்பீஸ்

இந்தியாவில் எல்லா பாகங்களிலும்
உள்ளவர் இதை உபயோகிக்கிறார்கள்.

# "டாம் டாம்"



சரியான காலத்தைக் காட்டும். அழகியது, நீடித்து உழைக்கும் டைம்பீஸ் என்று சொல்லுகிறார்கள். இவைகளைத்தான் விசேஷ அம்சங்களென்று இதை உபயோகிப்பவர்களே சொல்லுகிறார்கள். இதைவிட உங்களுக்குத் திருப்தியளிக்கக் கூடிய வார்த்தை என்ன இருக்கிறது. ஆகையால் "டாம் டாம்" அலாரம் டைம்பீஸ் வாங்குங்கள். இது சிறிது காலத்துக்கு மட்டுமல்ல, உங்கள் வாழ்நாள் பூராவும் உழைக்கும். இந்த 'டாம்டாம்" 30 லீவர் மூவ்மெண்டுகளால் ஆக்கப்பட்டது. அலாரம் சிறந்த ஓசையுடனும் விடாமலும் விட்டு விட்டு அடிக்கிறமாதிரி உள்ளது.

இரண்டு வருடம் உத்திரவாதம்.

நிக்கல் பெரிய சைஸ் ரூ. 8—0—0.

நிக்கல் மீடியம் சைஸ் ரூ. 6—0—0.

(பாக்கிங் அண்டு போஸ்டேஜ் வேறு)

(ஆர்டர் செய்பவர்கள் ரூ. 2—0—0 முன்னதாக அட்வான்ஸ் அனுப்பவேண்டும்.)

## ஜலால் அண்டு சன்ஸ்,

கவர்ன்மெண்ட் அண்டு ரயில்வே சப்ளேயர்,

ஹெட் ஆபீஸ் :— 46, ரட்டான் பஜார், சென்னை.

ப்ராஞ் ஆபீஸ்:— 190, B. மௌண்ட்ரோட், சென்னை.

,, 1242-1, ஆபிட்ரோட், ஹைத்ராபாத் (டெக்கான்.)

Registered No. M. 3401

பண்டிட் D. கோபாலாசார்லு அவர்களின் இரண்டு
ஔஷத ரத்னங்கள்

# ஜீவாம்ருதம்




(தேகாரோக்யத்திற்கும் பல விருத்திக்கும்)

ரத்தமிழந்து, ஜீவனற்று, பலஹீனத்துடன் வாழ்க்கையை வெறுக்கும் வாலிபர்களுக்கு இவ்வௌஷதம் ஓர் வரத்தைப் போன்றதே. இதை உபயோகிக்க ஆரம்பிக்கும் பொழுதே அளவற்ற உணர்ச்சியை யூட்டி, மிகுந்த ரத்த புஷ்டியை உண்டாக்கி, புத்துயிரைக் கொடுத்து, வாழ்க்கைக்கு இன்பத்தை விளைவிக்கின்றது. அளவற்ற தேகபலம் குறைவற்ற ஆரோக்கியம் முதலியவற்றை மேன்மேலும் செழிக்கச் செய்கின்றது.

விலை பெரிய புட்டி ரூ 3-4-0
சிறியது 1-12-0

# பாலபாஸ்கரா

(குழந்தை ஈரல் குலைக்கட்டி வியாதிகளுக்கு அற்புத நிவாரணி.)

குழந்தைகளின் ஈரல் (Liver) குலை (Spleen) பெருக்கங்களை அதி விரைவில் கரைத்து பூர்ண ஆரோக்யத்தை யளிக்கும் அரிய சஞ்சீவி. இதர மருந்துகளால் பயனற்றுப் போன விடங்களில் ஆச்சரியத்துடன் பலன் தந்துள்ளன. தவறுதலின்றி குணம் கொடுப்பதென்று பிரக்யாதி யடைந்தது. ஆரம்ப நிலைமைக் கென்றும், முதிர்ந்த நிலைமைக் கென்றும் இருதிறத்தி லுள்ளது.




ஆரம்ப நிலைமை மருந்து 1 மாதம் 4-0-0
முதிர்ந்த நிலைமை 8-0-0

விபரங்களுக்கு எழுதவும்.

தயாரிப்பவர்கள் :— **ஆயுர்வேதாஸ்ரமம்**
தபால் பெட்டி 287.
151, கோவிந்தப்ப நாயக்கன் வீதி, மதராஸ்.

Edited & Published by Vadakarai, Ramanujachariar, 24, Chandrappa Mudali S[illegible]
and Printed at the Liberty Press, 7, Sunkurama Chetty St, Madras